# ரகுநாதன்

# காவியப் பரிசு

மீனாட்சி புத்தக நிலைய

# காவியப் பரிசு

(கவிதைகள்)

ரகுநாதன்

(''திருச்சிற்றம்பலக் கவிராயர்'')

இயற்றியவை




மீனாட்சி புத்தக நிலையம்

60, மேலக் கோபுரத் தெரு, மதுரை – 1

கிளை : 228, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை- 5

முதற் பதிப்பு : மார்ச் 1981

மீனாட்சி—180

விலை ரூ 6-50

KAAVIYAP PARISU
Collection of poems
By RAGUNATHAN
("Thiruchitrambalak Kavirayar")

1st Edition: March 1981
144 Pages
10 pt. letters
18×12·5 cms
10. 9Kg. D/C
Seshasayee White Printing
Box Board Binding
VETTRI ACHAGAM, Madras— 24

MEENAKSHI PUTHAKA NILAYAM

60, West Tower Street, Madurai-625 001

Branch : 228, Triplicane High Road, Madras-600 005

# முன்னுரை

“நீ ஏன் கவிதை எழுதுகிருய்?” என்று ஒரு கவிஞனிடம் கேட்டால், “குயில் ஏன் பாடுகிறது?” என்ற எதிர்க் கேள்வியையே சமத்காரமாகப் பதிலாகத் தர அவன் எப்போதும் தயாராக இருப்பான். நான் அப்படியொன்றும் எதிர்க்கேள்வி எழுப்பி, என்னைக் கருவிலே திருவுடையவன் என்று கூறிக் கொள்ளத் துணியவும் இல்லை; விரும்பவும் இல்லை.

“துடிக்குதே தன் உதடும் நாவும்;
சொல்லு சொல்லெனவே நாவில்
இடிக்குது குறளியம்மே
இனிக்குறி சொல்லக்கேளே!”

என்று திருக்குற்ருலக் குறவஞ்சியில் வஞ்சிக் குறத்தி கூறும் கூற்று, கவிதைப் பிறப்புக்கான ஒரு பொது இலக்கணம் என்றே கூறலாம். எனினும் நான் ஏன் கவிதை எழுதுகிறேன் என்ருல், இவ்வாறு இடித்தும் துடித்தும் எழுகின்ற உணர்ச்சியை அல்லது உண்மையை, வசனத்தில் சொல்வதைக் காட்டிலும் கவிதையிலேயே அழுத்தமாகவும் ஆணித்தரமாகவும் கூற முடியும் என்பது ஒருபுறமிருக்க, அந்த உணர்ச்சியை அல்லது உண்மையைக் கவிதை வடிவத்தில் சொல்வது தான் எனக்குச் சுளுவாகவும் இருக்கிறது சொல்லப்போனுல், அதனைக் கவிதை வடிவத்தில்தான் அழுத்தமாக உணர்த்திக் காட்ட முடியும் என்ற நிலேயே, அதனைக் கவிதையாக்குவதையும் சுலபமாக்கி விடுகிறது எனலாம்.

இதனுல் கவிதை எழுதுவதே எனக்கு மிகவும் சுளுவாகவும் சுலபமாகவும் இருக்கிறது என்று நான் கூற வரவில்லை. கவிதை வடிவில் சொல்வதன் மூலமே ஓர் உணர்ச்சியை அல்லது உண்மையைப் பிறருக்கும் உணர்த்தி, அவர்கள் உள்ளத்தில் உணர்ச்சிபூர்வமான எதிரொலியை எழுப்ப முடியும் என்ற நிலே ஏற்படும்போது, சொல்ல வந்த உணர்ச்சியை அல்லது உண்மையை எவ்வாறு கவிதைப் பொருளாக மாற்றுவது, அவ்வாறு மாற்றிய கவிதைப் பொருளைக் கவிதையாக்க எந்த வடிவத்தைக் கையாள்வது என்று தீர்மானிப்பது ஒரு பிரசவ வேதனைதான். ஆயினும் ஓர் உணர்ச்சியைக் கவிதைப் பொருளாக்குவதற்கான முறையும், அதற்கேற்ற

பொருத்தமான வடிவும் மனத்தில் கருக்கொண்டு விட்டால், பிறகு அது கவிதையாக உருத்திரண்டு பிறவிப்பேற்றை எய்தக் காண்பது எனக்குச் சுலபமான காரியமே. இருந்தாலும், கவிதைக்கான வடிவம் இப்படித்தான் இருந்தாக வேண்டும் என்ற இரும்புக்கட்டுப்பாடு எதுவும் எனக்குக் கிடையாது. அதே சமயம் கவிதை என்பது கவிதை இலக்கியத்தின் அடிப்படைக் கூறுகளை இழந்த வடிவமற்ற ஊன்தடிப் பிண்டமாகவோ, ஊனமுற்ற விகாரப்பிறவியாகவோ இருந்துவிடக் கூடாது என்ற நியதியும் பிரக்ஞையும் எனக்குண்டு. எனவே ஒன்றைக் கவிதையாக்கும்போது எடுத்துக்கொண்ட பொருளுக்கேற்ப, அதற்கான வடிவத்தையும் நானே தேர்ந்தெடுத்துக் கொள்கிறேன்; அல்லது எனக்கு வேண்டிய புதிய வடிவை, பொருத்தமான வடிவை நானே உருவாக்கிக் கொள்கிறேன். இவ்வாறு பல்வேறு உணர்ச்சிகளையும் உண்மைகளையும் புதிய உத்திகளைக் கையாண்டு பொருத்தமான வடிவில் வடித்தெடுத்த பல கவிதைகள் இந்தத் தொகுதியில் உண்டு.

இது நூல் வடிவில் வெளிவரும் எனது மூன்றாவது கவிதைத் தொகுதி. இதற்குமுன் வெளிவந்த 'ரகுநாதன் கவிதைகள்' 'கவியரங்கக் கவிதைகள்' ஆகிய தொகுதிகளைப்போல், இதுவும் கவிதைப் பிரியர்களுக்கு நல்ல விருந்தாகவே அமையும் என்பதே என் நம்பிக்கை. இந்தத் தொகுதியில் நான் நாற்பதாம் ஆண்டுகளின் தொடக்கத்தில் தமிழ் இலக்கிய உலகில் ஒரு கலகக்கவியாகவும் அங்கதக் கவிஞனாகவும் அடியெடுத்து வைத்த காலத்தில் எழுதிய 'ரிஷி மூலம்' 'ஆசை பலியாச்சோ?' போன்ற கவிதைகள் தொட்டு, எழுபதாம் ஆண்டுகளின் இறுதி வாக்கில் எழுதிய 'திரும்பவும் திரும்பவும் பிறப்பேன்' கவிதை ஈறாக, சென்ற ஒரு தலைமுறைக் காலத்தில் நான் எப்போதெப்போதோ எழுதிய சிறிதும் பெரிதுமான சில கவிதைகள் அடங்கியுள்ளன. சிலரைப்போல் தலைப்புக்களை ரக வாரியாகப் பட்டியல் போட்டுக் கொண்டு, வகைக்கு நாலு என்று கணக்குப் பண்ணிக் கவிதை எழுதும் வழக்கமும் பழக்கமும் எனக்குக் கிடையாது. கவிதை எழுத வேண்டும் என்று தோன்றும் போது, அல்லது அவசியம் நேர்ந்து தூண்டும்

போது எழுதுவதுதான் எனது வழக்கம். அவ்வாறு பிறந்தவையே இதிலுள்ள கவிதைகள். இவற்றில் வானொலி ஒலிபரப்புக்காக எழுதியவை சில; சரித்திர நிகழ்ச்சிகளையும் சம்பவங்களையும் ஒட்டியெழுந்தவை சில; இதயத்தில் இடிப்பும் துடிப்பும் ஏற்பட்டு அதன் விளைவாகப் பிறவிப் பேறு பெற்று, பத்திரிகைகளிலும் சிறப்பு மலர்களிலும் ஏறிக்கொண்டவை சில.

இந்தக் கவிதைகளில் அவசியமான சிலவற்றுக்கு ஆங்காங்கே குறிப்புக்கள் கொடுத்திருக்கிறேன். அவை குறிப்பிட்ட கவிதைகள் எழுதப்பட்ட சந்தர்ப்பம் போன்ற விவரங்களைத் தெரிவிப்பதோடு, சில கவிதைகளை நன்கு புரிந்து கொள்வதற்கும் துணை செய்யும். ஒலிபரப்பானவை உட்பட, இக்கவிதைகள் அனைத்தும் கவிக்குயில் ஆண்டு மலர், ஜனசக்தி சுதந்திரதின மலர், கல்கி தீபாவளி மலர், ஆனந்தவிகடன் மாவட்ட மலர், தீபம் ஆண்டு மலர், சரஸ்வதி ஆண்டு மலர், தமிழ் வட்ட ஆண்டு மலர், கல்கத்தா தமிழ் மன்ற ஆண்டு மலர், நெல்லை இந்துக் கல்லூரி ஆண்டு மலர் மற்றும் நூற்றாண்டுவிழா மலர் ஆகியவற்றிலும், மற்றும் தாமரை, சாந்தி, கலைமகள், கல்கி, கலைக்கதிர், இலங்கை தினகரன் முதலிய சஞ்சிகைகளிலும் வெளிவந்தவையாகும். இவற்றில் 'பேச்செதற்கு?' என்ற கவிதை இந்தியில் வெளிவந்த 'பாரதீய கவிதா' என்ற அகில இந்தியக் கவிதைத் தொகுதியிலும், 'ஒற்றையடிப்பாதை' நேஷனல் புக் டிரஸ்ட் வெளியிட்ட தமிழ்க்கவிதைத் தொகுதியிலும் இடம் பெற்றிருந்தன.

இத்தக் கவிதைகளை ஒலிபரப்பிய சென்னை, திருச்சி வானொலி நிலையத்தாருக்கும், அச்சில் வெளியிட்ட பதிப்பாசிரியர்கள் மற்றும் பத்திரிகை ஆசிரியர்கள் ஆகியோருக்கும், இப்போது புத்தக வடிவில் அச்சிட்டு வழங்கும் மீனாட்சி புத்தக நிலையம் திரு. செ. செல்லப்பன் அவர்களுக்கும் எனது நன்றி உரியது.

ரகுநாதன்

## ஆசிரியரின் பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| சிறுகதை | : | ரகுநாதன் கதைகள் |
| | | சேற்றில் மலர்ந்த செந்தாமரை |
| | | க்ஷணப்பித்தம் |
| | | சுதர்மம் |
| நாவல் | : | பஞ்சும் பசியும் |
| | | கன்னிகா |
| | | புயல் |
| கவிதை | : | ரகுநாதன் கவிதைகள் |
| | | கவியரங்கக் கவிதைகள் |
| நாடகம் | : | சிலை பேசிற்று |
| | | மருது பாண்டியன் |
| வரலாறு | : | புதுமைப்பித்தன் வரலாறு |
| விமர்சனம் | : | இலக்கிய விமர்சனம் |
| | | சமுதாய இலக்கியம் |
| | | கங்கையும் காவிரியும் |
| | | பாரதியும் ஷெல்லியும் |
| | | பாரதி : காலமும் கருத்தும் |

# பொருளடக்கம்

# காவியப்பரிசு

# 1

**கவிதை நாடகம்**

**பாத்திரங்கள்**

| | | |
|---|---|---|
| வரகுணன் | : | சிற்றரசன் |
| கவிவாணன் | : | வரகுணனின் அரசவைக் கவிஞன் |
| வேங்கையன் | : | பேரரசன் |
| அமைச்சன் | : | வேங்கை நாட்டவன் |

மற்றும்

சேவகர் போர்வீரர்கள்

முதலானோர்

இக் கவிதை நாடகம் வானொலிக்காக எழுதப் பட்டு, திருச்சி வானொலி நிலையத்தாரால் 31.7.1957 அன்று முதன்முறையாக ஒலி பரப்பப் பெற்றது; இதன்பின் திருச்சி வானொலி, அ. இ. வானொலியின் வெளிநாட்டு ஒலிபரப்பு ஆகியவற்றில் பல முறை மீண்டும் ஒலிபரப்பப் பெற்றது. தமிழ்நாடு கலை இலக்கியப் பெரு மன்றத்தினர் இதனைத் திருச்சி, சேலம் முதலிய இடங்களில் மேடை நாடகமாகவும் அரங்கேற்றி யுள்ளனர்.

## காட்சி—1

வரகுணன்
கவிவாணன்
சேவகன்

**கவிவாணன் :**

எங்கோன் வரகுணன் செங்கோல் வாழிய!
மங்காப் புகழோடு வாழிய! வாழிய!

**வரகுணன் :**

வருகஎன் நற்கவி வாணனே! வந்திவண்
அருகினில் அமருக!

**கவிவாணன் :**

அமர்ந்தேன். ஆயினும்
வரகுண! யானிவண் வந்தவிச் சமயமும்
சரிகொலோ? அமைச்சர்தம் சார்வுற நீ இவண்
வீற்றிருக் கின்றனை. அவசர வேலையோ?
மாற்றலர் தொல்லையோ? மற்றெவ் விசனமோ?
தின்னுடைக் கதிர்முகம் தன்னிலோர் கார்முகில்
பின்னிப் படர்ந்திடப் பிழைஎன் நேர்ந்ததோ?

**வரகுணன் :**

புலவனே! அரசெனும் பொறுப்புள போதினில்
பலவிதக் கவலையும் பஞ்சமோ? நம்முடைப்
பகைவனவ் வேங்கையன் படைமூண் டானெனும்
வகையுள(வு) அறிந்துளம் வாட்டம் எய்தினேன்.

படைக்கல வலியிலோம்; பகைவன் முன்புநாம்
அடைக்கல மாவதை யன்றியோர் வழியிலே!
ஆயினும், கவலையை ஆற்றிடும் தமிழ்த்தேன்
பாய்ந்திடும் தின்னுடைப் பாடல் கேட்டுளம்
இன்புற எண்ணினேன். என்னுளம் மயக்குறு
அன்பனே! பல்சுவை அருமையும் வாய்த்தநற்
கவியினைச் சாற்றியென் கவலை மாற்றுவாய்!

கவிவாணன் :

புவியினை ஆண்டிடும் புரவல! கவிச்சுவை
தன்னிலே நீகொளும் தணியா வேட்கையை
முன்னமே அறிகுவேன். எனினும், மூண்டெழும்
பகையினை முடிக்குமுன் பாடல் கேட்பதோ?
நகையரோ உலகினர்? நாட்டைக் காத்திடும்
கடமையில் முதற்கண் கவலைகொள். பின்னருண்
படைமுகம் தன்னில்யான் பரணி பாடுவேன்!
நாட்டை, நகரினை, நாட்டின் மக்களை
வேட்டை யாடுமோர் வேட்கையன் வேங்கையன்
போர்வெறி தன்னைநீ பூண்டோ டறுப்பையேல்
ஓரருங் காவியம் உன்மேற் பாடுவேன்!
அன்னியன் கைபட அனுமதி யாதுநம்
பொன்னிலம் தன்னைநீ போரில் புரந்துயர்
வென்றியந் தோளொடு மீளும் பாதையில்
குன்றெனக் கவிமலர் குவியப் பாடுவேன்!

வரகுணன் :

நன்றுரை செய்தனை நாவல! ஆண்டினில்
என்றனைக் காட்டிலும் இளையன்நீ என்னினும்

இன்றெனை வென்றவன் நீயே! யான்இனிக்
கன்றிலேன்! கவல்கிலேன்! கடமை ஆற்றுவேன்!

**சேவகன் :**

மன்னவா! மன்னவா!

**வரகுணன் :**

யாரடா வந்தவன்?
என்ன நீ கொணர்ந்தனை? இயம்பு சீக்கிரம்!

**சேவகன் :**

புறமதிற் காவலைப் புரியும் வீரரில்
ஒருவன்யான் மன்னவ! உடைந்தது புறமதில்!
வேங்கையன் போர்ப்படை வெல்லற் கரியதாம்
வீங்குபேர் வெள்ளமாய் விரைந்திங் குற்றுநம்
நாட்டுள் புகுந்தது! நாசம் விளைத்தது!
கோட்டை தகர்ந்தது! கொடிமரம் சாய்ந்தது!

**வரகுணன் :**

போதும்உன் புலம்பல்! நிறுத்தடா! போரினில்
ஏதுதான் நேரினும் இதயம் கலங்கிலேன்!
பகைவனை எதிர்த்திடப் பயந்திலேன்! பாருளோர்
நகைத்திட அவனடி நாணிப் பணிகிலேன்!
போர்ப்பறை அறையுமின்! போர்முனை செல்லுமின்!
நேர்ப்பட எதிரியைப் பொருதே நில்லுமின்!
கொல்லுமின் எதிரியர் குழுவெலாம்! அவர்திறம்
வெல்லுமின்! வேங்கையை வீழ்த்துமின்! யானுமே
செருமுகம் நோக்குவேன்! சிந்தை சோர்கிலேன்!
வருவது வரட்டுமே! வருக போர்! வருக போர்!

## காட்சி—2

### போர் வீரர்கள்

(யுத்த ஆரவாரம்)

**போர்வீரர்கள் ;** (ஒவ்வொருவரும் ஒவ்வொரு வரியாக)

கொல்லுமின்!
வெல்லுமின்!
குத்துமின்!
உறுதியாய்

நில்லுமின்!
வீரர்காள்!
நெருப்பை வீசுமின்!

(வேறு )

கொன்றூரே பாவியர்கள்!
குலைந்ததுவோ நம் வீரம்?
இன்றோடு முடிந்ததுவோ?
இறைவா! உன் சோதனையோ?
வரகுணனும் அடிபட்டான்!
வசமாகப் பிடிபட்டான்!
நரகமினி நம் வாழ்க்கை!
வேங்கையனோ நம்மரசன்?
வீழ்ந்ததுவோ நம்நாடு?
வென்றதுவும் அன்னியனோ?
சூழ்ந்ததுவோ வெங்கலிதான்?
சுதந்திரமும் பறிபோச்சோ?

(வேறு)

**போர்வீரர்கள் வாழ்த்துரை:**

(ஒவ்வொருவரும் ஒவ்வொரு வரியாக)

வென்றியை எய்திய வேங்கையன் வாழிய!
இன்றென அவன்புகழ் என்றும் வாழிய!
வாழிய வாழிய எங்கோன் வாழிய!
ஊழி பெயரினும் வாழிய! வாழிய!

## காட்சி—3

வேங்கையன்
அமைச்சன்
கவிவாணன்
போர்வீரர்கள்

**வேங்கையன் :**

(வேறு)

கார்முகிலைக் கிழித்தெறியும் ககன மின்னல்
கதிரெனவே வாள்வீசிக் களத்தில், இன்றைப்
போர் முகத்தில் சமராடி வென்றி தேடிப்
போந்திட்ட வீரர்களே! உமக்கென் நன்றி!
பலநாளாய் வரகுணனைப் பகைத்து நின்றேன்.
பகைமுடித்தே அன்னவனைச் சிறைசெய் தென்முன்
தலைகுனிய வைத்திட்ட என்றன் தானைத்
தலைவர்களே! உமக்கென்றன் நன்றி! நன்றி!

**போர்வீரர்கள் :** (ஒவ்வொருவரும் ஒவ்வொரு வரியாக)

வேங்கையனெம் மன்னர்பிரான் வீரம் வாழ்க!
வென்றணிந்த வாகைமலர் ஆரம் வாழ்க!
ஓங்குபுகழ் வேங்கையன்தன் நாமம் வாழ்க!
உலகனைத்தும் அவன்புகழே ஓதி வாழ்க!

வேங்கையன் :

நாவலித்து வாழ்த்துரைத்தீர்! நன்றி! என்றன்
நற்றுணையாய் விளங்குகின்ற அமைச்ச! நந்தம்
காவலிலே சிறைப்பட்டுக் கிடக்கும் வீரர்
கணக்கென்ன? வரகுணனைத் தவிர்த்து மற்றோர்
யாவரவர்?

அமைச்சன் : மன்னவனே!

போரில் பட்டு

யமனுலகு சென்றவர்தாம் போக, நந்தம்
காவலிலே பிரதானத் தலைவர் முற்றும்
கட்டுண்டார்.

வேங்கையன் : அப்படியா?

களிப்புக் கொண்டேன்.

அமைச்சன் :

மன்னவனே! ஒரு புதுமை!

வேங்கையன் :

என்ன, கூறும்?

அமைச்சன் :

வாளெடுத்துப் போர்புரிந்து மாட்டிக் கொண்ட
அன்னவர்கள் தம்மோடோர் கவிஞன் தானும்
அகப்பட்டுக் கொண்டுள்ளான். ஆண்டில் அன்னோன்
சின்னவன்தான். என்றாலும், கவிதா சக்தி
சித்தித்த மாமேதை என்றே பல்லோர்
இந்நகரில் போற்றுகின்றார்!

**வேங்கையன் :**

என்ன சொன்னீர்?

ஏடெடுப்போன் கையினிலே இரும்பு வாளா?
காரிகையை உருப்போடும் கவிஞன் யுத்த
களத்திற்கட் டுண்டானு? விந்தை! அந்தப்
போரியற்றும் புலவனை யான்காணும் வேட்கை
பொங்குகின்ற துள்ளத்தில்!

**அமைச்சன் :**

பொறுப்பாய் மன்னு!

நேரிலந்தப் புலவனை நாம் வரவ ழைப்போம்.
நிற்கின்ற சேவகனே! கேட்பாய்! நேற்றைப்
போரினிலே சிறைப்பிடித்த புலவன் தன்னைப்
போயிங்கு அரை நொடியில் அழைத்து வாராய்!

(சேவகன் சென்று கவிவாணனோடு வருதல்)

மன்னவனே! யான் முன்னம் சொன்ன அந்த
மாமேதைக் கவிஞன் அதோ வருதல் காணாய்!

**வேங்கையன் :**

சின்னவனாய்த் தோற்றுகிறான்!

**அமைச்சன் :**

ஆமாம். ஆனால்

திறமையிலே வல்லவன்தான்.

**வேங்கையன் :**

பொறுத்துப் பார்ப்போம்.

கவிவாண! வரவேண்டும்! நேற்றைப் போரில்
களத்தூடே வாளெடுத்த நின்றன் வீரம்
செவிகேட்டேன். எனினும்நின் கவிதை கேட்கும்
சித்தத்தால் உனையிங்கே அழைக்கச் செய்தேன்.

**கவிவாணன் :**

புவியாளும் மன்னவனே! குயிலைக் கூண்டில்
போட்டடைத்துப் பாடென்ருல் பாடப் போமோ?
கவியாநீ கேட்கின்ருய்? மன்னு! எங்கும்
கட்டளைக்குக் கீழ்ப்படிந்தோ கவிதை பொங்கும்?

**வேங்கையன் :**

பாவலனே! நீஎன்றன் கைதி; நானே
பாராளும் பேரரசன்! பார்த்துப் பேசு!
ஆவலினைப் பூர்த்திசெயக் கேட்டால், இந்த
ஆணவமோ? ஈதென்றன் ஆணை! பாடு!

**கவிவாணன் :**

பாடுவதா மன்னவனே? எதைநான் பாட?
பகைமூண்டு வந்தெங்கள் நாட்டின் மக்கள்
வீடுகளைச் சூறையிட்டுச் சுடுகா டாக்கி,
வீரர்களைப் போர்க்களத்தே வெட்டிச் சாய்த்தாய்!
பேடுதனைப் பிரிந்தலறும் அன்றில் போலே
பெண்டிரெல்லாம் கணவர்தமைப் பிரிந்து சாம்பி
வாடுதற்கு வழிவகுத்தாய்! அவர்தம் வாழ்வின்
மங்கலநன் நாண்கயிற்றைப் பறித்தாய்! தேய்த்தாய்!
கூடுவிட்டுப் பறந்தறியாக் குஞ்சைப் போன்ற
குதலைமொழிச் செல்வத்தைக் கொன்ருய்! செந்நெல்
ஆடுகின்ற வயல்முழுதும் அழித்துத் தீய்த்தாய்!
ஆலயத்தைப் பேய்விடுதி ஆக்கி மாய்த்தாய்!
பாடுவதா மன்னவனே? எதைநான் பாட?

**வேங்கையன் :**

பாடுதற்கா பொருளில்லை? இவண்நீ எம்முன்
பகர்ந்தனையே பல வார்த்தை. அவற்றைக் கொண்டே
நாடுகொண்ட என்வெற்றிப் போரைப் பற்றி
நல்லதொரு பரணியினைப் பாடேன்; கேட்போம்.

**கவிவாணன் :**

நாட்டுமக்கள் சுதந்திரத்தை, நலத்தைக் கொன்று,
நரவேட்டை யாடுகின்ற வெறியை, வெம்போர்
மூட்டுகின்ற ஆதிக்க வேட்கை தன்னை
முன்னிறுத்திப் புகழ்பாட மூடன் அல்லேன்!
கேட்டுக்கொள் : எனைப்பயந்த அன்னை நாட்டைக்
கீழ்ப்படுத்தி ஆளுகின்ற மன்னா! என்னை
வாட்டுவித்து எக்கொடுமை செய்த போதும்
வாய்திறந்து உனைப்புகழ்ந்தோர் வார்த்தைபாடேன்!

**வேங்கையன் :**

காய்சினத்தை மூட்டுகிறாய் கவிஞா! கேட்ட
கவிதையினைப் பாடமறுக்கின்ற நின்றன்
வாய்திறக்க வைக்கவழி வகுக்கும் மார்க்கம்
வகைபலவும் அறிந்தவன்யான்! நினைவிற் கொள்நீ!
போய்இருந்து சிந்தனைசெய். இரண்டே மாதப்
பொழுதுக்குள் பரணியினைப் பாடா விட்டால்
நாய்கழுகுக் கிரையாவாய்!

**கவிவாணன் :**

நன்று மன்னா!
நானுன்னைப் புகழ்ந்தொருசொல் பாடும் துன்ப
நோயைவிட நீ விதிக்கும் மரணம் தன்னை
நோகாமல் வரவேற்பேன். வருகின் றேன்யான்.

## காட்சி—4

வேங்கையன்
அமைச்சன்

**அமைச்சன் :**

அரசே!

**வேங்கையன் :**

யாரது?என்றன் அமைச்சர் தாமோ?
அமைச்சரே! அவனென்ன சொல்லு கின்றான்?

**அமைச்சன் :**

உரைசெய்யப் புதிதாக ஒன்றும் இல்லை.
ஊமையனாய் மாறிவிட்டான்; ஒன்றும் பேசான்.

**வேங்கையன் :**

பேசானா?

**அமைச்சன் :**

ஆம் அரசே! அவனை நாங்கள்
பேசவைக்க முயன்றதெலாம் வீணா யிற்று!
கூசாமல் வெங்கொடுமை பலவும் செய்தோம்;
குற்றுயிராய்க் கொல்லாமற் கொன்றும் பார்த்தோம்.
ஆசாமி வாய்திறக்க மறுத்தே விட்டான்!

**வேங்கையன் :**

அதிசயம்தான்! வேறென்ன முயற்சி செய்தீர்?

**அமைச்சன் :**

பயங்காட்டல் இனிப்பலியா தென்றே அந்தப்
பாவலனை நயத்தாலும் மயக்கப் பார்த்தோம்.

**வேங்கையன் :**

மயங்கிலனோ?

**அமைச்சன் :**

ஆம். அரசே! மயங்கி லாதான்.

**வேங்கையன் :**

வசப்படுத்த என்னென்ன முயற்சி செய்தீர்?

**அமைச்சன் :**

மலைபோலே பெருஞ்செல்வம் தருவோம் என்றேன்;
மாணிக்க அபிஷேகம் செய்வோம் என்றேன்;
துலைபாரம் ஏற்றியவன் எடைக்கு முத்தும்
தூயமணி வகைபலவும் நிறுப்போம் என்றேன்;
பாடுகின்ற பாடல்வரி ஒவ்வொன் றுக்கும்
பசும்பொன்னிற் பந்துருட்டி மகிழ்வோம் என்றேன்;
மாடுமனை மாளிகையும், செந்நெல் விம்மும்
வயற்பரப்பும் சாசனமாய்த் தருவோம் என்றேன்;
நாடு முற்றும் புகழ்கூற அவனை ராஜ
நாவலனாய்ப் பிரகடனம் செய்வோம் என்றேன்.
ஈடுகட்டி நானென்ன இசைத்த போதும்,
இளங்கவிஞன் ஒரு சிறிதும் மசிந்தா னில்லை!

**வேங்கையன் :**

வேடிக்கை தான் அமைச்ச! போரில் கண்ட
வெற்றியொரு பெரிதாமோ? சொல்லை நம்பிப்
பாடிப் பிழைக்கு மிந்தக் கவிஞன் தன்னைப்
பணிவிக்க ஏலவில்லை! நன்றென் ஆட்சி!

அமைச்சன் :

பொன்னுசை மண்ணுசை காட்டிப் பார்த்தும்
புலவனவன் மயங்கிலனே! இனிமேல் நாமும்
என்னுசை காட்டுவதோ?

வேங்கையன் :

இதனைக் கேட்பீர்!
இளைஞனவன் என்பதைநீர் எண்ணிப் பாரும்.
வச்சிரம்போல் மனவுறுதி பெறினும், அன்னான்
வாலிபன்தான் என்பதை நினைவு கூரும்.
கச்சணிந்த பெண்ணழகி ஒருத்தி காதல்
கடைக்கண்ணில் கவிஞனவன் கவிழ்ந்திடானோ?

அமைச்சன் :

ஆம், அரசே! அதுவுமொரு வழிதான்.

வேங்கையன் :

ஆமாம்!
அதுவொன்றே இறுதிவழி. அதையும் பார்ப்போம்:
காமினியை நீரறிவீர் அன்றோ? அன்னாள்
கவினழகை ஒருசிறிதே எண்ணிப் பாரும்.
வார்த்தெடுத்த பொற்சிலைபோல் வடிவும், நல்ல
வாலிபமும் நிறைந்தாளை, கலையால் நெஞ்சம்
ஈர்த்துவிடும் திறத்தாளை, இசையில் கூத்தில்
இணையில்லாக் காமினியை அனுப்பிப் பார்ப்போம்.

அமைச்சன் :

அரசவையின் நர்த்தகியாள் தனையோ ஆங்கே
அனுப்புதற்கு மனம் கொண்டீர்? நன்றீ தாமோ?

**வேங்கையன் :**

விரசமிதில் ஏதுமில்லை, அமைச்ச! ஈதில்
வெற்றிகண்டால் அனைவருக்கும் அதுவே வெற்றி.
காமினியோ கலையரசி; கன்னி. அந்தக்
கவிஞனுமோர் கட்டழகன்; வீரன். ஈதில்
தீமையெதும் காண்கில்லேன். இருவர் தம்மின்
திறமைக்கும் இதுவொன்றே தேர்வு மாகும்.
இம்முயற்சி வெற்றியுறின் நாமும் அந்த
இளங்கவிஞன் தனைவெற்றி கொள்வோம். மற்றும்
செம்மைநிறை காமினியாள் தனக்கும் பண்பில்
சிறந்தானை மணம்முடித்த தாகும் அன்றோ?

**அமைச்சன் :**

ஆம், அரசே! நீர்சொன்ன வார்த்தை உண்மை.
அதுவுமொரு யோசனைதான்.

**வேங்கையன் :**

ஆமாம். இன்னே
போம்; அவனை இங்கழைத்து வாரும். இந்தப்
புதுப்போரில் யார்வாகை புனைவார் பார்ப்போம்!

## காட்சி—5

**வேங்கையன்**

**அமைச்சன்**

**வேங்கையன் :**

வாரும்,என்றன் நல்லமைச்ச! மாதால் வென்று
வாழ்த்துரைக்க வந்தீரோ? சொல்லும் செய்தி.

அமைச்சன் :

பாராளும் மன்னவனே! பகர்வ தென்னே?
பாவையந்தக் காமினியாள் தானும் தோற்றாள்!
சீராளும் புலவனிடம் நடனச் செல்வி
சிந்தையினைப் பறிகொடுத்தாள்!

வேங்கையன் :

கொடுத்தால் என்ன?
விருப்புக் கூறிநின்ற கவிஞன் வீழ்ந்தால்
வென்றதுவும் நாமன்றோ?

அமைச்சன் :

அதுதான் இல்லை!
கலையரசி காமினியோ கவிஞன் தன்னைக்
கண்டதுமே அவன்மீது காதல்கொண்டு
நிலைகுலைந்து நிறையழிந்தாள்! ஆனால், அந்த
நெஞ்சுரத்தில் மிஞ்சிநிற்கும் கவிஞன் மட்டும்
உலையிலிட்டும் உருகாத உருக்கைப் போலே
உறுதியினை இழக்காது சிலையாய் நின்றான்.
அலைமகளைப் பழிக்கின்ற அழகி தன்னை
அவமதித்தான்; புறக்கணித்தான்!

வேங்கையன் :

அமைச்ச! நன்று.
புலவனுக்கு நானளித்த இரண்டு மாதப்
பொழுதும்தான் இன்றோடு போயிற் றன்றே!
இலவுதனைக் காத்திருந்த கிளியைப் போன்றே
இனிமேலும் இருப்பதிலோர் பயனும் இல்லை.
விலைமதியாக் கிளிமொழியாள் தன்னை நெஞ்சில்
விரைந்தேற்றுக் கொள்ளாத புலவன் தன்னைக்
குலைநடுங்க விலங்கிட்டுச் சபையின் முன்னே
கொண்டுவந்து நிறுத்திடுக. சென்று வாரும்!

(அமைச்சன் சென்ற பின் தனிமொழி)

மந்திரியோ போய்விட்டார்; எனினும் என்றன்
மனவரங்கில் நிம்மதியைக் காணேன், காணேன்.
இந்தவொரு தோல்வியைப்போல் என்றும் எங்கும்
என்வாழ்வில் யான் கண்ட தில்லை, இல்லை!
இளைஞனென்றே மதித்திட்டேன். எனினும் அந்த
இளங்கவிஞன் நெஞ்சுரமோ யுகமாய்க் காய்ந்து
விளைந்திட்ட நல்வயிரம் என்னத் தேர்ந்தேன்.
வியப்பிதுதான்! இளைஞனவன் வீரம் என்னே!

## காட்சி—6

வேங்கையன்
அமைச்சன்
கவிவாணன்

**அமைச்சன் :**

வேங்கைமன்ன! சொன்னபடி கவிஞன் தன்னை
விலங்கிட்டுக் கொணர்ந்திட்டேன்.

**வேங்கையன் :**

நன்று, நன்று.

சாங்காலம் வந்ததடா கவிஞா! இந்தச்
சமயத்தும் பணிகிலேயோ? பணிகி லாயேல்
தீங்கான முடிவுனக்கு நேரும்! இந்தச்
சிறுவயதில் உயிரிழக்க மனங்கொண் டாயோ?
பாங்காக என்றன்மீ தொருபாட் டேனும்
பாடிவிடு! உயிர் பிழைத்துப் போகச் செய்வேன்.

கவிவாணன் :

சிறை பிடித்து வைத்தென்னை வதைத்து ரத்தம்
சிந்துவதால் சிந்தனையைச் சிதைக்கப் பார்த்தாய்;
கறைபடிந்த கொடும்பாவக் கரத்தால் செல்வம்
கணக்கின்றித் தருவனெனக் கதைத்துப் பார்த்தாய்;
மண்ணாசை பொன்னாசை தன்னைக் காட்டி
மதிமயக்கி வாய்பிடுங்க முயன்றும் பார்த்தாய்;
பெண்ணொருத்தியினை அனுப்பி, காதல்
பேச்சாலே பேரங்கள் நடத்திப் பார்த்தாய்;
பண்ணாத கோரமெல்லாம் இழைத்தும், என்னைப்
பணிவிக்கப் பார்த்திட்டாய்! பணிந்தே னல்லேன்.
வேங்கையனே! ஒருவார்த்தை. என்னைத் துண்டாய்
வெட்டிவெட்டிப் போட்டாலும் பாடேன், பாடேன்!
நீங்காத பழிச்சொல்லைச் சுமந்து வாழும்
நிலையைவிடக் கொலைமரணம் இனிதாம் அன்றோ?

வேங்கையன் :

முடிவாகக் கேட்கின்றேன், கவிஞ! கோபம்
மூளுமுனம் யோசித்து முடிவைச் சொல்வாய்!

கவிவாணன் :

முடிவன்றே உரைத்திட்டேன். மன்னா! அந்த
முடிவினுக்கோர் முடிவில்லை. தெரிந்து கொள்வாய்!

வேங்கையன் :

பிடிவாதம் செய்யாதே! முடிவை மாற்று!

கவிவாணன் :

பேசியதைப் பேசாதே! முடிவைச் சாற்று!

**வேங்கையன் :**

சாகாதே. பிழைக்கப்பார்!

**கவிவாணன் :**

சாகச் சித்தம்!

**வேங்கையன் :**

ஆகா! நீ என் சொன்னாய்?

**கவிவாணன் :**

அறிந்தே சொன்னேன்!

**வேங்கையன் :**

முடிவிதுவா?

**கவிவாணன் :**

முடிவிதுவே!

**வேங்கையன் :**

முடிந்தாய்!

**கவிவாணன் :**

நன்றி!

**வேங்கையன் :**

(வேறு)

விலங்குகளை அகற்றுங்கள்! வீரனையே போற்றுங்கள்!
கலங்காத உளம்படைத்த கவிஞன் சீர் சாற்றுங்கள்!
இலங்கிடுமென் ஆட்சியிலே இதுவரையில்
இவனைப்போல்
நலங்கொண்ட பெருவீர நாயகனைக் கண்டதில்லை!

மந்திரியே! இவ்வீர மதிவாணன் தன்மார்பில்
இந்த மலர் மாலையினை இப்போதே சூட்டுங்கள்!

**வேங்கையன் :**

(வேறு)

கவியாளும் தமிழ்ப்புலவ! நின்றன் வீரம்
கண்ணாரக் கண்டிட்டேன். உறுதிப் பாட்டால்
புவியாளும் மன்னனென்னை வெற்றி கண்டாய்!
போர்முகத்தில் நான்கண்ட வெற்றி தேய்த்தாய்!
விலைமதிக்க வொண்ணுவுன் வீரக் கொள்கை
வேட்கையினைக் கண்டுள்ளம் விம்மக் கண்டேன்!
தலைசாய்த்துன் சன்னிதியில் வணக்கம் செய்தேன்!
தமிழ்மகனே! நின்னைஇனி விடுவித் தேன்யான்!

**கவிவாணன் :**

வேங்கையனே! விளையாட்டா? இல்லை, மெய்யா?

**வேங்கையன் :**

விளையாடும் நேரமில்லை; மெய்தான். நம்பு!
ஓங்குபுகழ் நின்வீர உறுதி கண்ட
உறுதியினால் சொல்லுகிறேன். கவிஞ! என்பால்
நீவிரும்பும் எவ்வரமும் கேட்பாய். அஃதை
நிறைவேற்றித் தருகின்றேன்.

**கவிவாணன் :**

மன்னா! என்னைச்
சாவினின்றும் விடுவித்தாய். எனினும் வாழ்க்கை
சாகாத வாழ்வாமோ? அடிமைப் பட்ட
தேசத்தே நான்வாழப் போமோ? எங்கள்
திருநாட்டின் சுதந்திரத்தைத் திரும்பித் தந்து

ராசனெங்கள் வரகுணனை மீட்டும் எங்கள்
நாயகனுய் ஆக்குவையேல் அதுவே போதும்.

**வேங்கையன் :**

தேசபக்தி மிகுந்தொளிரும் கவிஞ! நின்றன்
திருவுள்ளப் படியந்த வரமே தந்தேன்.
வீசு புகழ்ப் பெருவீர மகனே! மீட்டும்
வேண்டுகின்ற வரமுண்டேல் சாற்று! சாற்று!

**கவிவாணன் :**

சாற்றுகின்ற வரம்தன்னைத் தருவா யென்று
சத்தியமாய்ச் சொல்லுவையோ?

**வேங்கையன் :**

ஐயப் பாடோ?

ஏற்றிருக்கும் செங்கோல்மீ தாணை. இன்னே
எவ்வரமும் கேட்டிடுவாய்! இனிதே ஈவேன்.

**கவிவாணன் :**

போற்றுகின்றேன் மன்னவனே! உறுதி தந்தாய்.
புகல்கின்றேன் என்விருப்பை! அன்றோர் நாளில்
காற்றலைக்கும் மலர்க்கூந்தல் ஆட, மையுண்
கண்களிலே காதலெனும் அமுதம் பாய,
ஆற்றொழுக்குப் போலசைந்து, ஆடிப் பாடி,
அபிநயத்தின் விந்தையெலாம் காட்டி, மெல்ல,
வீற்றிருந்த என்னருகே வந்து, காதல்
விளம்பியவக் காமினியை விரும்பிக் கேட்டேன்.

**வேங்கையன் :**

எதிர்பார்த்து நானிருந்த வரம்தான் கேட்டாய்!
இளங்கவிஞ! அவ்வரமும் இன்னே ஈந்தேன்.

கவிவாணன் :

புதுவாழ்க்கை பெற்றுவிட்டேன், மன்னா! நின்றன்
புகழோங்கி வளர்ந்திடுக! போற்றி! போற்றி!
நாடுதனை விடுவித்தாய்; மேலும் உன்பால்
நான்விரும்பிக் கேட்டவரம் தன்னை, அன்னப்
பேடனைய நடையாளை, என்றன் உள்ளப்
பேழையிலே புகுந்தென்னைப் பிணித்த அந்த
ஏடறியாக் காவியத்தை எனக்கே ஈந்தாய்!
இனிமேலே நானுன்மேல் இணையே யில்லாப்
பாடல்மிகும் காவியத்தைப் பரிசாய் ஈந்து
பாடுகின்றேன் மன்னவனே! மகிழ்ந்து கேட்பாய்!



1799ஆம் ஆண்டு அக்டோபர் 16ம்தேதி. அன்றுதான் கும்பினி அதிகாரி மேஜர் பானர்மன் சுதந்திர வீரன் கட்டபொம்மனுக்குத் தூக்குத் தண்டனை வழங்கினான். அதன்படி கயத்தாற்றுச் சாலையோரக் கட்டைப் புளிய மரம் ஒன்றில் கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்டான். அன்றைய விசாரணையின்போது மேஜர் பானர்மன்னுடன் தெற்கத்திச் சீமையைச் சேர்ந்த பாளையக்காரர்களும் இருந்தனர். தூக்கிலிடப்படுமுன்னர் அங்கு கூடி நின்ற மக்களேயும் பிறரையும் நோக்கிக் கட்டபொம்மன் தனியுரையாகச் சொல்லும் முறையில் அமைந்தது பின்வரும் கவிதை. 15-9-1958 அன்று திருச்சி வானொலியின் ''ஒலி ஏடு'' நிகழ்ச்சியில் இக்கவிதை 'நாடகத் தனியுரை'யாக அரங்கேற்றப்பட்டது.

# தூக்குமேடை வாக்குமூலம் 2

தூக்கிலிடு என்றுனது நாக்கூ சாமல்
துணிந்துரைத்த துரைமகனே! கேட்பாய்: தர்ம
வாக்குரைக்க வந்தவன்போல் நடித்து, பொய்மை
வழக்குரைத்து, என்மீது வஞ்சம் தீர்த்து,
சாக்குருவி போலெனக்குத் தூக்குத் தண்டம்
தனைவிதித்தாய் அல்லாது, தருமம் தன்னைக்
காக்குமொரு நாணயத்தை, கடமை தன்னைக்
கடுகளவும் காத்தனையோ? வெட்கம்! வெட்கம்! 1

'கொள்ளையிட்டாய்; கொலைசெய்தாய்; ஸ்ரீவை குண்டக்
கோட்டை நெல்லைச் சூறையிட்ட கொள்ளைக் காரப்
பிள்ளையனைத் தரமறுத்தாய்; அழைப்புத் தந்தும்
பேட்டிக்கு வர மறுத்தாய்; கப்பம் தன்னை
வெள்ளையருக் கில்லையென்றாய்!'– என்றே என்மேல்
வேண்டுமட்டும் குற்றங்கள் பலவும் சாட்டிக்
குள்ள நரித் தந்திரத்தால் என்னைக் கொல்லக்
குறிபார்த்தாய் அல்லால்நன் னெறிபார்த் தாயோ? 2

குற்றங்கள் என்றுரைத்தாய்! எதுதான் குற்றம்?
குலச்சிறப்பை, குடிப்பிறப்பை, மானம் தன்னை
விற்றுமுதல் ஆக்கிவிட்டு, விதேசிக் கொள்ளை
வேட்டையர்உம் காலடியில் வணங்கி வீழ்ந்து,
குற்றேவல் செய்துயிரைக் காக்கும் இந்தக்
கோடாலிக் காம்புகள்போல் யானும் தேசப்
பற்றிழந்து வாழாது, பகைவர் நும்மைப்
படைதிரட்டி எதிர்த்தேனே! அதுவா குற்றம்? 3

கப்பமில்லை என்றுரைத்தேன். உண்மை! எங்கள்
காடுகளில் கழனிகளில் ஏரைப் பூட்டி
வெப்பம்வெயில் பாராமல் உழைத்துப் பொன்னை
விளைவித்தோர் எம்மக்கள்; அவர்தம் செல்வம்
குப்பையிலே கிடந்தாலும் அயலார் நீங்கள்
குன்றுமணி அளவேனும் கொள்ளப் போமோ?
கப்பமெனும் பேராலே எங்கள் வாழ்வைக்
காவுதர மறுத்தேனே! அதுவா குற்றம்? 4

குற்றமெனில் ஒன்றுண்டு; ஒன்றே ஒன்று!
கொள்ளையிடும் நோக்கத்தால் எங்கள் நாட்டுள்
புற்றெடுத்த கருநாகம் போலே நீங்கள்
புகுந்தெமது பொன்னுட்டை வளைந்து சுற்றி,
முற்றுகைகள் இட்டுவந்த மோசம் தன்னை
முளைமுறித்துக் களைபறியாப் பிழையால் இந்நாள்
முற்றவிட்டுத் தவிக்கின்ற குற்றம் ஒன்றே
முன்னவரும் என்னவரும் புரிந்த குற்றம்! 5

குற்றத்தின் கொடும்பலனும் கண்டு கொண்டேன்!
　　குருதிவெறி கொண்டலையும் ஓநாய்க் கூட்டம்
சுற்றிநிற்கும் சபையினிலே சூதும் வாதும்
　　சூழ்ச்சியுமே தீர்ப்பாகும் சூழ்ச்சி தன்னை
மற்றவர்கள் கற்றறியும் வண்ணம், என்றன்
　　வல்லுயிரைப் பலிகொடுப்பேன்! எனினும் இந்த
ஒற்றைமுழச் சிறுகயிற்றை நம்பி, ஆட்சி
　　ஒச்சவெணும் வெள்ளையனே! உனக்கோர் வார்த்தை! 6

தூக்கிலிடும் முழக்கயிற்ருல், சினந்து சீறும்
　　துப்பாக்கிக் குண்டுகளால், அதிர்ந்து விம்மித்
தாக்குகின்ற பீரங்கித் தொகையால், யுத்த
　　தந்திரத்தால், படைபலத்தால், சிறைக்கூடத்தால்,
ஈக்குலம்போல் மக்கள்தமைக் கொன்றே தள்ளி
　　எதிர்த்தாலும், சுதந்திரத்தின் வேட்கை தன்னைத்
தூக்கிலிட, சிறைபிடிக்க, சுட்டுத் தள்ள,
　　சுடுசாம்பல் ஆக்கிவிட மார்க்கம் உண்டோ? 7

பாளையத்தார் தமைக்கூட்டி, இங்கே என்னைப்
　　பலிவாங்கி, அவர்க்கெல்லாம் பாடம் காட்டி,
ஆளுகையை நிலைநிறுத்தத் திட்டம் தீட்டும்
　　அன்னியனே! மரணத்தைக் கண்டே அஞ்சும்
கோழைமகன் நானல்ல! மாண்ட பின்னும்
　　குலவையிட்டு நின்ருெலிக்கும் என்றன் வீரச்
சூளுரையைச் சரித்திரத்தி னின்றும் உம்மால்
　　துடைத்தெடுக்க, தூர்த்துவிட வலிமை உண்டோ? 8

சாதியென்னும், இனமென்னும், சமயம் என்னும்
சச்சரவாம் நச்சரவைத் துணையாய்க் கொண்டு
சோதரரைப் பிரித்தாளும் சூழ்ச்சி யாலே
சோரங்கள் செய்தெம்மை ஆள வெண்ணும்
பாதகரே! உம்முடைய சூதும் வாதும்
பகற்கனவாய், பழங்கதையாய் முடியும் காலம்
பூதலத்தில் பின்னொருநாள் தோன்றும், தோன்றும்!
புடைபுடைக்கும்! பழிவாங்கும்! பொய்யை மாய்க்கும்! 9

காலமதைக் கண்கொண்டு நீயும் நானும்
காணுவதற் கேலாது! மக்கள் அந்நாள்
சூலமிட்ட காளைகள்போல் முறுக்கித் துள்ளி,
சுதந்திரத்தின் கோஷத்தை முழக்கித் தள்ளி,
காலமெலாம் தமையடக்கி வாழ்ந்தார் தம்மை,
கடல்கடந்த பகற்கொள்ளைக் காரர் உம்மை
ஆலமரத் திடிவிழுந்தாற் போன்றே தாக்கி
அரசுகொளும் முரசொலியை அகிலம் கேட்கும்! 10

என்னருமைத் தாயகமே! நாட்டின் செல்வம்
எனத்திகழும் இளையவரே! தந்தை மாரே!
அன்னையரே! கன்னியரே! மங்கை மாரே!
அனைவருக்கும் சிரம்தாழ்த்தி நன்றி சொன்னேன்.
அன்னியர்தம் ஆதிக்க வேட்டை தன்னை
அழித்தொழிக்கத் தொடுத்திட்ட உரிமைப் போரின்
முன்னணிக்கு நீரளித்த உதவிக் கெல்லாம்
முடிவுண்டோ? சொல்லில் அவை முடியப் போமோ? 11

வீரர்களே! பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டை
வீழு முனம் எம்முடலம் வீழும் என்றே
தீரமுடன் ஆர்த்தெழுந்து நின்றீர்! உங்கள்
திருமருவும் மார்பகலம் தன்னில் ஒன்னார்
சோரங்கள் பலவியற்றி, இருளில் ஏவும்
துப்பாக்கிக் குண்டுமழை துளைத்த போதும்
வீரர்களே! நீர்வீழ்ந்த துண்டு; உந்தம்
வீரம்விழக் கண்டவரும் உண்டோ? உண்டோ? 12

வேல்பிடித்துச் சென்றமகன் முதுகில் பட்டு
வீழ்ந்திட்டான் என்றவுரை உண்மை யாமேல்
பால்கொடுத்த மார்பகத்தைப் பறித்துத் தள்ளிப்
பருந்துக்கு விருந்திடுவேன் என்றுங் கார்த்தாள்
கால்வழியில் வந்துதித்த தாயர் மாரே!
களத்தூடே மாண்டுபட்ட நுந்தம் மைந்தர்
சூல்தரித்த புலிக் குகைக்கே பெருமை தந்தார்!
தொல்புகழை நிலைநாட்டித் துறக்கம் சேர்ந்தார்! 13

கன்னியரே! புதுமணத்து மஞ்சள் காப்பின்
கட்டவிழ்க்கு முன்பேஉம் கணவன் மாரை
'அன்னைநிலம் தனைப்பிணிக்கும் அடிமைக் காப்பை
அறுத்தெறிந்து வருக!'வென அடைகாய் தந்து
புன்னகையும் முகப்பொலிவும் பொங்கப் பொங்கப்
போர்முனைக்கே வழியனுப்பி வைத்தீர்! அந்தத்
தன்னலத்தைக் கருதாஉம் தியாகம் தன்னைச்
சந்ததமும் தமிழுலகம் வாழ்த்தும், வாழ்த்தும்! 14

தந்தையரே! முதுமையினால் தளர்ந்து வாடும்
தள்ளாத காலத்தே துணையாய் நின்ற
மைந்தர்தமை, குலவிளக்கை, ஒற்றைக் கொன்றாய்
வந்துதித்த வாரிசை வாரித் தந்தீர்!
செந்திருப்போல் மனைவிளக்கி நின்ற என்றன்
தேசத்தின் பெண்குலமே! கணவர் தம்மைத்
தந்துங்கள் தாயகத்தின் மானம் காத்தீர்!
தலைவணங்கி உமக்கெல்லாம் நன்றி சொன்னேன். 15

மாடிழந்தோம்; மனையிழந்தோம்; நந்தம் செல்வ
மைந்தர்களை, கணவர்தமை இழந்தோம்; சொந்த
நாடிழந்தோம்; நகரிழந்தோம்; கோட்டை கட்டி
நாமிருந்த செயலிழந்தோம்! எனினும் நெஞ்சில்
சூடிழந்தும், சுரணைதனை இழந்தும், பிச்சைச்
சோற்றுக்காய் மானத்தை இழந்தும் வாழும்
பேடிகளைப் போல்வாழ மறுத்தோம்! யுத்தப்
பேயரிடம் வீழ்ந்திட்டோம்! தாழ்ந்தோ மில்லை! 16

நல்லவர்போல் உறவாடி நாசம் செய்யும்
நரிக்குணத்து வெள்ளையரும், உடலில் தோன்றிக்
கொல்லுகின்ற நோயைப்போல் நம்மைக் காட்டிக்
கொடுக்கின்ற பாவிகளும், வாழ்வை நச்சுப்
புல்லுருவி போலுறிஞ்சித் தீர்க்கும் மூடப்
பொய்மைகளும் செய்த சதிப் போக்கால், இன்று
தொல்லைநெடுங் காலமதாய்ப் பேணிக் காத்த
சுதந்திரத்தை அயலார்முன் தோற்றோம், தோற்றோம்! 17

தோற்றுவிட்டோம்! என்றாலும் நந்தம் நாட்டுச்
சுதந்திரப்போர் வரலாற்றின் ஏட்டில், கங்கை
ஆற்றுவெள்ளம் போற்பொழிந்த நமது ரத்த
ஆகுதியும், நமைப்பயந்த அன்னை மார்கள்
ஊற்றுக்கண் திறந்தாற்போல் உகுத்த நீரும்
உருவேறும்! பொன்னெழுத்தாய் மாறும்! இந்த
மாற்றத்தை எதிர்கால உலகம் காணும்!
வையகத்தீர்! இவ்வாக்கும் பலிதம் ஆகும்! 18

தாயகமே! தமிழ்நாடே! தரும தேவே!
தாரணியில் சத்தியத்தைக் காக்கும் வேட்கைத்
தீ அகத்தே கொண்டவரே! தியாகம் செய்யும்
தேசபக்த நன்மணிகாள்! நாச காலர்
வாயகத்தே வீழ்ந்திட்ட நாட்டைக் காக்க
வாளெடுத்தே, அடிமையெனும் புன்மை வாழ்வைச்
'சீ' என்றும் போரதனைத் தொடங்கி வைத்தே
செல்கின்றேன்; செல்கின்றேன்; விடையும் கொண்டேன்!
19



பிறவி ரகசியத்தையும் மனித வாழ்க்கையை யும் பற்றிய தத்துவ விசாரம், சிந்தனையாளர்களை யும் இலக்கிய கர்த்தாக்களையும் பன்னெடுங் கால மாக அலைத்து வருவதாகும். மதவாதத் தத்துவா சிரியர்கள் பலரும் 'பிறவிப் பெருங்கடல் நீந்தும்' மனிதப் பிறவியின் ரகசியத்தை, தொட்ட இடத் திலேயே வந்து முடியும் சக்கரவட்டத் தத்துவ மாக, மனித வாழ்க்கையை மாற்றமற்ற, வளர்ச்சியற்ற ஒன்றாகக் கண்டார்கள். வாழ்க்கை என்பது தொட்ட இடத்திலேயே வந்து முடியும் சக்கர வட்டமல்ல என்பதைக் கருத்துலகில் மாத்திரம் நின்று கண்ட சிவ வாக்கியர் போன்ற சில சித்தர்கள் இந்தச் சக்கர வட்டத் தத்துவத்தை மறுத்தார்கள். இவற்றினூடே பரிணாம வாதக் கருத்துக்களும் ஆங்காங்கு தலை காட்டின. பரிணாம வாதத்தை விஞ்ஞான பூர்வமாக அறிந்து தெளிந்து, அதனடிப்படையில் பொருள்முதல்வாதமும் விஞ் ஞான பூர்வமாக வளர்ந்தோங்கியுள்ள காலம் இது. மதவாதிகளின் கருத்தில் தொடங்கி, சிவ வாக்கியர் முதலிய சித்தர் வழியிலும் சென்று, பரிணாம வாதத்தின் பாதை வழியாக, இயக்க வியல் தத்துவத்தை ஆதாரமாகக் கொண்டு மனித வாழ்க்கையையும் வளர்ச்சியையும் கான்பது பின்வரும் தத்துவார்த்தக் கவிதை. பிறவியும் மனித வாழ்க்கையும் தொட்ட இடத்தி லேயே வந்துமுடியும் சக்கர வட்டமல்ல, மாறாகத் தொட்ட இடத்துக்குத் திரும்பவும் வராமலே சுழலேணியைப்போல் மேன்மேலும் வளர்ந் தோங்கிச் செல்வதாகும் என்பதையே இக் கவிதை உணர்த்துகின்றது.

## எண்ணுங்கால்...... 3

1

என்னையே யானேக்கி
எண்ணுகின்றேன். எண்ணுங்கால்—
கன்னி மகளொருத்தி
காதலினல் அன்னவளை
முன்னி அரவணைத்து
முலைத்தடத்தில் முகம்புதைத்து,
கன்னிச் சிறையுடைத்துக்
கருப்பாதைக் காரிருட்டில்
என்னையே நானிழந்து
ஏதுமிலா தாகிவிட
எண்ணுகின்றேன்; யானேக்கி
எண்ணுகின்றேன். எண்ணுங்கால்—

2

குய்யத்துக் கும்மிருட்டில்,
குறுமணலாய், சிறுதுளியாய்ப்
பையக் குடிபுகுந்து,
பருத்துத் திரண்டுருண்டு,
கையாகிக் காலாகிக்
கண்மூக்குத் தானுகி,
வையத்தில் ஒருநாளில்
வந்தே விழுந்தேனே,

கையெடுத்து மெய்யணைத்துக்
கனகமுலை அமுதூட்டி,
நெய்யளைந்த சிறுசோற்றை
நிலாக்காட்டி வாயூட்டி,
என்னை வளர்த்தாளின்
இடைநீங்கி, மடிநீங்கி,
தன்னை மெலவறிந்து,
தாய்ப்பாலின் சுவைமறந்து,
என்னையே யானறியும்
இளைஞனை மாறியபின்
என்னையே யானோக்கி
எண்ணுகின்றேன். எண்ணுங்கால்—

3

வந்தவொரு வழிமறந்து,
மாரோடு சேர்த்த முதம்
தந்தவளின் சுனைமார்புத்
தடத்தை மறந்துவிட்டு,
சிந்தை தனியாகி,
சித்தமெல்லாம் நானுகி,
விந்தை யுலகினிலே
வேற்றூரான் போலாகிப்
பந்தமுற்றுச் சொந்தமுறப்
பற்றுக்கோல் காணேனாய்
வெந்தே மனங்குமையும்
வேளையிலே, காதலெனும்
மந்திரத்தில் கட்டுண்டு,
மங்கை ஒருத்தியின்மேல்
சிந்தைகொண்டு அன்னவளைச்
சேரத் துடிக்கின்றேன்!

பிறந்துவந்த இடம்மறந்த
　　பின்னரிந்தப் பின்னுளில்,
கறந்ததொரு தடம்மறந்து
　　காலம் கடந்த பின்னர்,
துறந்துவந்த இடம்தேடி
　　உள்ளில் துடிப்பேற,
மறந்துவிட்ட ஊர்நாடி
　　மனத்தில் மயக்கேறப்
பண்ணுகின்ற மருமத்தைப்
　　பகுத்தறிந்தே ஒளிகாண
எண்ணுகின்றேன்; யானேக்கி
　　எண்ணுகின்றேன். எண்ணுங்கால் —

4

தொட்டுத் தொடங்கியதோர்
　　தோற்பையை என்றைக்கோ
விட்டுப் பிரிந்தேகி
　　வெகுதூரம் வந்த பின்னர்,
வட்டமொன்றில் நான்வளைய
　　வந்தாலும், தொடக்கத்தில்
எட்டியடி வைத்திட்ட
　　இடம்வந்தே சேர்வதுபோல்,
ஒட்டை உதறிவிட்ட
　　ஊருக்கே மீண்டோடும்
கட்டையென என்மனமும்
　　கருவூரைத் திருவூராய்
நண்ணுவதேன்? இந்நாளில்
　　நாடுவதேன்? என்றுங்கே
எண்ணுகின்றேன்; யானேக்கி
　　எண்ணுகின்றேன். எண்ணுங்கால் —

5

புவனத்து வாழ்வியலின்
புதைபொருளின் தன்மையினைக்
கவனித்துச் சிறிதே நாம்
கருத்தூன்றிப் பார்க்குங்கால்,
கருவடைந்த ஊருக்கே
மறுபடியும் வருவதுதான்
உருவடைந்த உயிர்வாழ்வின்,
உலகியலின் ரகசியமோ?
மறுபடியும் வந்தவொரு
மார்க்கத்தை நாடுவதால்
உறுபயனும் ஏதுகொலோ?
உலகியலில் வளர்ச்சியெனப்
பெறுவதெலாம் வாயுமிழும்
பேச்சோடு சரிதானோ?
கிறுகிறுக்கும் ராட்டினமே
கீழ்மேலாய் வருவதுபோல்,
கடலலைகள் படைதிரண்டு
கரைநோக்கிப் பாய்ந்தாலும்
திடலேறித் தாவாமல்
திரும்பவுமே கடலுக்குள்
தாழ்ந்திறங்கித் தன்னுள்ளே
தானுகும் சாட்சியம்போல்
வாழ்விதுவும் வளர்ச்சியின்றி
வட்டமிட்டுச் சுற்றிவரும்
செக்கடியின் தடம்தானோ?
திரிகையெனக் கிறுகிறுக்கும்
சக்கரமோ? ஸ்தம்பிதத்தின்
சாயைதரும் மாயையைத்தான்
மண்ணுலகின், மானிடத்தின்
வாழ்வென்றே நம்மனத்தில்
எண்ணினமோ? என்றேதான்
எண்ணுகின்றேன். எண்ணுங்கால்—

6

வித்தொன்று முளைகீறி,
விகசித்து வெளியேறி,
எத்திக்கும் கிளைவீசி,
ஏற்றம் உடைத்தாகி.
மொட்டாகிப் பூவாகி,
முற்றிக் கனியாகி
விட்டாலும் அக்கனியும்
விதையாக மாறுவதேன்?

முட்டைச் சிறைக்குள்ளே
மோனத் தவம்புரிந்த
திட்டை தனைக்கலைத்து
நெட்டுயிர்த்து வெளியேறி
வந்தவொரு சிறுகுஞ்சும்
வளர்ந்துபெரி தானபின்னர்
முந்தைப் பழம்வீடாய்,
முட்டைக் கருச்சிறையாய்,
மீட்டுமுரு மாறுமொரு
வேட்கையினால் ஒருதுணையைக்
கூட்டிக் களிப்பதற்தாய்க்
கொக்கரித்துத் திரிவதுமேன்?

ஐயிரண்டு மாதங்கள்
ஆகியபின் கருவூரின்
பையகன்று கீழிறங்கிப்
பாருலகில் வந்தவொரு
பாலகனும் வயதேறிப்
பாலுணர்ச்சி மிக்கோங்கும்
வாலிபனாய், மானிடனாய்
மாறியபின், மீட்டுமொரு

குறுமணலாய் சினைக்கருவாய்
குழந்தையென மாறுதற்காய்
மறுபடியும் பிறப்பிடத்தே
மாலாகி வாடுவதேன்?

ஒன்றுமற் றொன்றாகி,
உருமாறி வேறாகிச்
சென்றிடுமென் றெண்ணுவதும்
சிரிப்புக் கிடமான
மயக்கின் மருள்தானோ?
மாற்றமெனச் சொல்வதெலாம்
இயக்கமிலா இயக்கத்தின்
ஏமாற்றுப் பொருள்தானோ?
இன்றேல் இவ்வாழ்க்கைக்கே
ஏதுபொருள்? ஏதுபொருள்?
என்றேயென் னுள்ளத்தில்
எண்ணுகின்றேன். எண்ணுங்கால் —

7

ஒன்றே அதுவாக
உருமாறும் மாயையல்லால்
ஒன்றுமற் றொன்றாக
ஒருபோதும் ஆவதில்லை
என்றே வழக்காடி
எதிர்க்கட்சி பேசுவதால்
நன்றேதும் உண்டாமோ?
நானிலத்தில் எந்நாளும்
உறைந்த தயிர் பாலாக
ஒருபோதும் ஆனதுண்டோ?
கறந்திழிந்த பால்மீண்டும்
கனமுலைக்கண் போனதுண்டோ?

கருகிவிட்ட கட்டைதனில்
கனல்புகுந்து மீண்டுமதை
விறகாக்கித் தந்தருளும்
விந்தையுமே நிகழ்ந்ததுவோ?
குடம்பை தனித்தொழியக்
குஞ்சாகிப் பெற்றிடுமோர்
உடம்பும் குடம்பையினுள்
உற்ருெடுங்கக் கண்டதுண்டோ?

விதையில் முளைத்தெழுந்து
விகசித்த மரம் மீண்டும்
புதையுண்ட விதையாகப்
போனதுண்டோ? வழக்காற்றில்
இன்றைக்கு நேற்ருகும்
என்பதலால், இறந்தொழிந்து
சென்றிட்ட நாள் இன்ருய்த்
திரும்பிடுமோ? இவ்வாருய்
ஒன்றுமற் ருென்ருகிடுமோர்
உலகியலின் உண்மையினை
நன்றுணர்த்தும் சான்றுகளை
நாமுணர மாட்டோமோ?
ஒன்றுமற்ருென் ருவதுவே
உலகியலோ? வேறுண்டோ?
என்றும்நான் எனக்குள்ளே
எண்ணுகின்றேன். எண்ணுங்கால்—

8

வித்தொன்று முளைத்தோங்கி
விகசித்து விளைந்தக்கால்
கொத்தாகப் பல வித்தும்
குலைதள்ளிக் காய்க்காதோ?

பெட்டைச் சிறுகோழி
    முட்டைவழிப் பிறந்தாலும்
பிட்டி வலியெடுக்கப்
    பெறுங்காலம் அக்கோழி
ஒற்றைக்கோர் முட்டையுடன்
    ஒய்தல் வழக்காமோ?
பெற்ற முட்டை அத்தனையும்
    குஞ்சாகப் பெயராதோ?

வித்தும் மலையாகும்;
    வெடித்துவந்த குஞ்சுகளும்
பத்தாகும்; நூறுகும்;
    பதினு யிரம்ஆகும்;
ஒன்றே பலவாகும்;
    உருவான பற்பலவும்
குன்றுதம்; மலையாகும்;
    இமயக் கொடுமுடிபோல்
நின்றேங்கும்! எனுமிந்த
    நியதியுல கறியாதோ?
பற்பலவாய் ஒன்றுங்கே
    பல்கிப் பரந்துலகில்
உற்பவித்த பின்னதுவே
    ஒன்றுய் ஒடுங்கிடுமோ?

பலவாகிப் பலவாகி
    பரவு பரி ணமத்தால்
நிலவுகின்ற உலகியலின்
    நியதியினை நாமறிந்தால்,
ஒன்றே பலவாகிப்
    பலவற்றில் உறைந்தொளிரும்
பொன்றுத பேரியக்கப்
    பொருளதனைப் புரிந்திட்டால்,

நான் ஒருவன் ஆனாலும்
நாமறியாக் காலமுதல்
மாநிலத்தில் உற்பவித்த
மானிடமாம் சாகரத்தில்
ஒருதுளியாம் என்றிடுமோர்
உணர்வுதனைப் பெற்றுவிட்டால்,
வருநாளில் இத்துளியே
வழிவழியாய் வளர்ந்தோங்கிப்
பெருகும், பெருகியொரு
பெருங்கடலாய் மாறுமென்று
கருதுகின்ற பக்குவத்தைக்
கண்டறிந்து கொண்டுவிட்டால்,
என்னில் உலகதனை,
உலகியலில் என்னிடத்தை
உன்னி உணர்ந்தறியும்
உள்ளொளியை ஏற்றிவிட்டால்,
முன்னைப் பழமையிலும்
முளைத்துவந்த வாரிசாய்,
பின்னைப் புதுமைக்கும்
பீடிகையாய் நான் வாழ்ந்தால்,
என்றைக்கே வாழ்ந்தாலும்
என்றென்றும் வாழேனோ?
என்றெண்ணிப் பார்க்கின்றேன்
எண்ணுங்கால்.... எண்ணுங்கால்....



பூமிக்கு அப்பாலுள்ள கோளங்களின் ரகசியங்களேயும், விண்வெளியின் விந்தைகளே யும் மனிதன் நேரிலேயே சென்று கண்டறிந்து வரும் சகாப்தம் இது. விஞ்ஞான சாதனை இத் தகைய வெற்றிப்பாதையில் வீறு நடை போட்டு முன்னேறி வரும் அதே சமயம், மனித உள்ளத் தில் தாழ்வு மனப்பான்மையையும் அவநம்பிக் கையையும் சிறுமையுணர்ச்சியையும் உருவாக் கும் வகையில், அனந்தமான பிரபஞ்ச ரகசியத்தை அற்பாயுள் கொண்ட மானிடன் அளந்தறிய முடியுமா எனப் பேசக்கூடிய தத்துவ வாதிகளும், சமயவாதிகளும், 'விஞ்ஞானி' களும்கூட உலகில் உள்ளனர். அத்தகையோரின் கூற்றுக்கு மறுப்புரையாகவும், அத்தகைய தத்துவவாதத்துக்குப் பதிலாகவும் அமைந்ததே அடுத்துவரும் கவிதை, இக் கவிதை முதன் முதலில் வானொலியின் 'கவிச் சொல் கேளீர்' நிகழ்ச்சியில் 12-7-1960 அன்று திருச்சி வானொலி மூலம் ஒலிபரப்பாயிற்று.

# வானத்தைப் பார்க்கின்றேன்! 4

1

வானத்தைப் பார்க்கின்றேன்!
வண்ணமதித் தண்ணிலவு;
மோனத்தே வழிநடக்கும்
முகிற் கூட்டம்; எண்ணரிய
மீனக் குலச்செறிவின்
மினுக்கும் ஒளித்துளிகள்—
ஆனவற்றை யெல்லாம்
அண்ணாந்து பார்க்கின்றேன்!
பார்க்குங்கால்—

கிட்டாத தொலைதூரக்
கிரகத்தை, வானமகள்
வட்டாட விட்டெறிந்த
வளர்மதியை, அன்னவள்தன்
மட்டார் கருங்குழலின்
மலர்ச்சரமும் கட்டவிழ்ந்து
விட்டா லெனச்சிதறி
வீழ்ந்திட்ட விண்மீனை
எட்டிப் பிடிப்பதற்கும்
என்வசமாய் ஆக்குதற்கும்
மட்டில்லாப் பேராவல்
வளரும் மனத்தோடு
எட்டியெட்டி வானத்தை
ஏறிட்டுப் பார்க்கின்றேன்!
பார்க்குங்கால்—

ஏதோ எங்கிருந்தோ
என்னை விளித்தழைத்துச்
சூதாய் ஒருகுரல்தான்
சொல்லத் தொடங்கியது;

2

"ஏடா! சிறுமனிதா!
எத்தை விரும்புகின்றாய்?
கூடாத விருப்பன்றோ
கொண்டிட்டாய்! வெட்டவெளிப்
பாழாம் பரவெளியும்
பருத்துத் திரண்டுருண்டு
தூளாய்ச் சிதறியதோர்
தோற்றமெனக் காண்கின்ற
அண்டாண்ட பிண்டம்
அகிலாண்டம் பலகோடி
உண்டுண்டு! அதிலுன்றன்
உலகம் சிறுதுளிதான்!

சிறுதுளியில், இனந்தெரியாச்
சிறுதுளியாய்ச் செனித்துலகில்
உருவெடுத்துச் சின்னாளே
உயிர்வாழ்ந்து, உருவழிந்து
மறைகின்ற மானிடன் நீ!
மாயப்ர பஞ்சத்தே
உறைகின்ற பொருளையெலாம்
உன்வசமாய் ஆக்குதற்கு
விரைகின்ற நின்விருப்பில்
விவேகம் சிறிதுண்டோ?

எட்டியெட்டிப் பறந்தாலும்
ஈசல் கழுகாமோ?
முட்டிமுட்டிப் பாய்ந்தாலும்
முதுகெலும் பிலாப் புழுதான்
கூனை நிமிர்த்தெழுந்து
கொடிமரம்போல் நின்றுயர்ந்து
வானைத் தொட்டுவிடல்
வழக்காமோ? வளர்ந்தோங்கும்
இமயக் கொடுமுடியைச்
எறும்பொன்று கண்டிடுமோ?

3

"'அறிவுண்டு; விஞ்ஞான
ஆற்றல் மிகவுண்டு;
செறிவுண்டு' என்றெல்லாம்
செருக்குற்று, நீ அகந்தை
வெறிகொண்டு நின்றாயோ?
விஞ்ஞான அறிவாலே
அறிந்ததுதான் யாதுகொலோ?
அறிந்தறிந்தும் அறியாமை
நிறைந்திருக்கக் கண்டதலால்
நிறைவுகண்ட துண்டோ நீ?

கற்பாந்த கோடி
கணக்கிறந்த உடுக்குலத்தின்
அற்புதங்கட் கெல்லாம் நீ
ஐந்தொகையைக் கணக்கிட்டு
வரையறுத்துக் கூறிவிட
வகையுண்டோ? அறிவியலும்
உரைவகுத்துக் கூறியதன்
உட்பொருளும் அறியாயோ?

உடுக்கணத்தின் ஒளிக்கிரணம்
உலகைவந்து சேர்வதற்கே
அடுக்கியபற் பலப்பலவாம்
ஆண்டுகளும் ஆகுமென்றும்,
உலகைவந்து தீண்டாத
உடுக்குலத்தின் ஒளிக்கதிர்கள்
பலப்பலவாய் உண்டென்றும்,
பனிப்புகைபோல் தோற்றுகின்ற
*பாற்பாதைக் கூட்டத்தைத்
தனித்துக் கணக்கெடுத்துத்
தந்தவர்கள் இல்லையென்றும்,
திசையனைத்து மேயணைத்துச்
செம்மாந்து திரிகின்ற
விசுவப் பெருங்கோல
விம்மிதத்தின் ரகசியத்தை
அறியும் முயற்சியிலோ
அறியாமை தான் மேலும்
தெரியவரும் என்றும அது
செப்புவதும் தேர்கிலேயோ?

4

"ஆதலினல்—

ஆசைதனை விட்டுவிடு!
அண்டாண்ட லோகத்தின்
தூசிதனைத் தானும்
தொட்டறிய ஏலாத

* Milky way என்னும் நட்சத்திரமாலை

பகுத்தறிவே சதமென்று
மோசங்கள் போகாதே!
மொழிந்திட்டேன்!''
என்றுங்கே
பேசியதோர் ஒலிகேட்டேன்;
பிரமித்தேன்!
அக்குரலும்
நேசக் குரல்தானே?
நினைவை மருட்ட வந்த
மோசக் குரல்தானே?
வேருமோ? என்றே நான்
யோசித்தேன்; யோசித்தேன்!
யோசிக்கும் வேளையிலே
ஆசைகொண்ட என்னுள்ளத்
தந்தரங்கத் தோர் குரலும்
பேசத் தொடங்கியது:

5

''அறிதோறும் அறிதோறும்
அறியாமை காண்பதனுல்
அறிவே அறியாமை
ஆகுமென வழக்காடி
முறிவுபடப் பேசிவிடில்
முயற்சிக்கே இடமேது?

பிரபஞ்சம் பெரியதுதான்;
பிரமிப்புத் தருவதுதான்!
கண்டாலே வியப்பூட்டும்
ககனத்தே சுழன்றுடும்
அண்டாண்ட கோளங்கள்
அளவு கடந்தவைதான்!
என்றாலும்—
அறிவின் வலிமையினை
அவமதித்தால் சரியாமோ?
அறியாமை என்பதுவும்
அறிந்தறிந்து மேம்படுமோச்
பாசத்தை விட்டுவிடு!

செறிவில் கண்டுணர்ந்து
திருத்தமுறச் செய்யுமொரு
நெறியில்நாம் காண்கின்ற
நிலையேதான் ஆமன்றோ?

"மானுடமாம் சாகரத்தின்
வழிவழியாம் சாதனையைத்
தானொதுக்கி வைத்துவிட்டுத்
தாரணிவாழ் மானிடரை
ஒற்றைத் தனியாளாய்
ஒதுக்கி, அவருருவைச்
சிற்றெறும்பாய், சிறுபுழுவாய்ச்
சித்திரிப்ப தில் நமது
கற்ற சித்து வித்தைகளைக்
காட்டுவதும் சரியாமோ?

"இன்றைத் தனிமனிதன்
என்றோ உலகினிலே
குன்றில், குகைப்புழையில்
குன்றி உயிர்காத்து
முன்னேறி வந்ததொரு
முன்னோர்தம் வழிவந்த
பின்னோனே; இவன் பின்னால்
பின்னும் பலப்பல பேர்
இன்னமுமே உற்பவிப்பார்
என்பதுவும் அறியோமோ?

6

"பண்டைச் சிறுமனிதன்
பறக்கும் பறவைகளைக்
கண்டே அவை போன்று
ககனத்தே சிறை விரித்துத்

தானும் பரப்பதற்குத்
தாகமற்றுப் போயிருந்தால்,
வானூர்தி கள் இன்று
வலந்திரிதல் சாத்தியமோ?

""மச்சங் களைப் பார்த்து
மாகடலில் நீந்திடுமோர்
இச்சை கொண்ட மாந்தரினம்
இல்லாது போயிருந்தால்,
அச்சமின்றி நாவாய்கள்
அலைகடலில் சென்றுலகம்
மெச்ச மிதப்பதுவும்
விளைந்திருக்கக் காண்போமோ?

""ஆதவனைக் கனியென்று
அனுமன் கருதி, அதை
மோதிப் பிடித்துவிட
முனைந்திட்டான் என்று கதை
கட்டிவிட்ட கற்பனைகள்
காவியத்தில் இல்லையென்றால்,

சமர்க்களத்தில் எதிரிகளைச்
சணக்காடாய் ஆக்கிடுமோர்
அமர்க்கருவி யாய், பிரம்ம
அஸ்திரமாம் ஆயுதத்தைப்
பற்றியதோர் கனவுதனைப்
பண்டைக் கவிவாணர்
உற்றறிந்து நம்மவர்க்கே
உரையாது போயிருந்தால்,

இற்றைக்கு—

உலகை வலம் திரிந்து
உலவி வரும் மதிப்பிள்ளை ●
இலகு புகழ்சுமந்தே
இயங்குவதைக் காண்போமோ?

● ஸ்புத்னிக்

அணுவைப் பிளந்ததனுள்
அடங்கியதோர் மாபூத
கணமொத்த சக்தியினைக்
கண்டறிய லாகிடுமோ?
சந்திரனும் லோகமதைத்
தானடையும் முயற்சியிலே
உந்திப் பறந்துயர்ந்தே
உலகை வியப்புறுத்தும்
விந்தையென ஏவுகணை
விளைந்திருக்கக் கூடிடுமோ?

7

"இன்றைக் கனவெல்லாம்
எதிர்காலம் நனவாகும்!
குன்றும் உன்முன்னால்
குன்றுமணி போலாகும்.

ஆதலினால்—

ஆசைகொண் டகிலமெலாம்
அடையவெணும் லட்சியத்தில்
மோசமொன்று மில்லை! அந்த
முயற்சியிலே தவறில்லை!

அறிதோறும் அறிதோறும்
அறியாத பற்பலவும்
தெரியவரும் தவறுகளைத்
திருத்துகின்ற காரணத்தால்
அறிவில் சிறுமையில்லை!
ஆசையுறல் தீதில்லை!

அண்டாண்டம் பெரிதென்றும்,
அனந்தமென்றும், அறிவாலே
கண்டறிவ தால் பெருமை
காண்பதுவே சிறப்பாகும்!

"அறிவாலே நாமுலகை
அறிந்தறிந்து மேம்படுமோர்
அறச்செருக்கு நெஞ்சகத்தே
அமைந்திருத்தல் பிழையில்லை!

அறிவாற்றல் என்பதுவும்
ஆண்டுபல வாய் வளர்ந்து
நெறிப்பட்டு, மெருகேறி,
நினைப்பில் உருவேறி,
வழிவழியாய் வந்தவொரு
வற்றாத செல்வமென்றும்,
எழில்வாழ்வு நமக்கருளும்
இன்பென்றும் உணர்ந்திட்டால்,
இழிவில்லை! விண்ணகத்தை
எட்டிடுமோர் ஆசையிலும்
பழியில்லை! எவ்விதத்தும்
பாவமில்லை!"

என்றாங்கே
மொழிந்திட்ட தென்னெஞ்சம்.

8

ஆதலினால்—
ஆசையிலே பழுதுண்டோ?
அறிவின் துணைகொண்டு,
வீசிச் சுழன்றியங்கும்
விண்ணுலகைத் தொட்டுவர
ஆசைப் படுவதிலே
அகந்தைக்கும் இடமுண்டோ?



# எங்கள் திருநெல்வேலி



இந்தக் கவிதை ஆனந்தவிகடன் வெளியிட்ட நெல்லை மாவட்டச் சிறப்பு மலருக்காக எழுதப்பட்டு அம்மலரில் வெளிவந்தது.

*

சொல்வேலி தனையெழுப்பிச்
சுளுவாகப் பாட்டெழுதப்
பல்வேறு பொருளுண்டு.
பார்போற்றும் எங்கள்திரு
நெல்வேலிச் சீமையிதன்
நீடுபுகழ் பாடுதற்குச்
சொல்லேது? சொன்னாலும்
சொல்லுக்கு முடிவேது?

பெருமைமிகும் தமிழ்க்கன்னி
பிறந்ததுவும், தமிழ்வளர்த்த
குறுமுனிவன் வாழ்ந்ததுவும்
எம்பொதிகைக் குன்றிலன்றோ?
தென்பொதிகை தனிற் பிறந்த
தீந்தமிழோ னுடன்பிறந்த
பொன்பொதிந்த புனல்பெருகும்
பொருநையெனும் கருணைமகள்

வருகையினால் பூமியெல்லாம்
 வளங்கொழித்துப் பொன்விளைக்கும்
திருநெல்லைச் சீமையிதன்
 சிறப்பெல்லாம் ஓர்சிலவோ?
நெல்லுக்கு வேலிகட்டி
 நெல்வேலி நாதரெனும்
சொல்லுக்கு இலக்கானார்
 சிவனென்று சொலப்படுமோர்

நல்லசிறு கதையினையும்
 நாடறியும்; என்றாலும்
நெல்வயல்கள் வேலியென
 நெருக்கமுறச் சூழ்ந்திருக்கும்
நல்விதத்தால் நெல்வேலி
 என்றுதமிழ் நாடனைத்தும்
சொல்விதத்தைப் பெற்றதெனச்
 சொன்னாலும் பொருந்தாதோ?
சிந்துபூந் துறையுறையும்
 செல்வரென்று, சம்பந்தர்
எந்தமரை வாழ்த்திய சொல்
 இன்றைக்கும் பொருந்தாதோ?

செல்வருக்குச் செல்வரெனத்
 திருக்கோயில் கொண்டிருக்கும்
நெல்வேலி யப்பனையும்
 நினையார் இருப்பாரோ?
தாமிரநற் சபைதனிலே
 சராசரத்தின் தத்துவத்தைச்
சாமியவன் கால்தூக்கிச்
 சதிராடிக் காட்டுகின்ற
அம்பலத்துக் கூத்தாட்டை
 அன்பர்குழாம் கண்டுவிட்டால்
தம்பிறவிப் பேறுணர்ந்து
 தாங்களுமே ஆடாரோ?

கோயில்கொண்ட நெல்லையப்பன்
　　கோபுரத்தின் ஆசார
வாயிலினைக் கடந்துள்ளே
　　அடியெடுத்து வைத்திட்டால்,
கல்லும் கவிபாடும்
　　என்றுரைக்கும் கட்டுரையின்
சொல்லுக் கிலக்கணமாய்
　　ஆங்குள்ள தூண்களிலே
ஏழிசையும் தனியெழுப்பும்
　　இன்னிசையும் கேட்பார்க்குத்
தாழ்சடையோன் தன்வடிவைத்
　　தாளத்தால் காட்டாதோ?

கற்கோவில் மலிந்திருக்கும்
　　கன்னித் தமிழ்நாட்டில்
சொற்கோவில் பலவெடுத்துத்
　　தொண்டுசெய்த நெல்வேலிப்
பாவலர்கள் கூட்டமொரு
　　பட்டாளம் ஆகுமென்று
நாவலித்து நானுரைத்தால்
　　நானிலத்தார் மறுப்பாரோ?
நாற்றுநடும் பள்ளியர்தம்
　　நாவில் தவழ்ந்துவரும்
ஊற்றுத் தமிழ்மொழியை
　　இலக்கியத்தில் உருவேற்றித்
தெள்ளுதமிழ்த் தேன்பாகாய்த்
　　தித்திக்க முக்கூடற்
பள்ளதனைப் பாடியதும்
　　திருநெல்லைப் பதியன்றோ?

கற்ருரின் மன மெல்லாம்
கவராடிக் கொள்ளைகொளும்
குற்ருலக் குறவஞ்சி
கொடுத்ததுவும் நெல்லையன்ருே?
நாட்டுமக்கள் வாழ்க்கையினை
நல்லபல கதைகளிலே
தீட்டுவித்துத் தமிழ்நாட்டுச்
சிறுகதைக்கோர் மன்னனெனப்
புகழோங்கிப் போய்மறைந்த
புதுமைப் பித்தனையும்
திகழ்ந்தோங்கச் செய்ததுவும்
திருநெல்லைப் பதியன்ருே?
ரசிகமணி டிகேசி
நம்மவர்க்குத் தமிழ்க்கவிமேல்
பசியெடுக்கச் செய்ததுவும்
நெல்வேலிப் பதியிலன்ருே?
இத்தனையேன்? வெள்ளையர்தம்
இரும்புப் பிடிக்குள்ளே
செத்துவந்த பாரதத்தைச்
சிங்கமெனச் சீற்றமுற்று
வீறுகொளச் செய்த கவி
பாரதியைப் பெற்றெடுத்த
பேருென்றே நெல்வேலிப்
பெருமைசொலப் போதாதோ?

அன்னியரைப் பேய்க்கனவாய்
ஆட்டிவைத்த கட்டபொம்மு
மன்னனவன் வாழ்ந்ததெங்கள்
நெல்வேலி மண்ணிலன்ருே?
நாடாண்ட வெள்ளையர்க்கு
நமனுகி, அவர்க்கெல்லாம்
கோடாலி போல்விளங்கிக்
கொடியெடுத்த சிவாவோடு

செக்கிழுத்த சிதம்பரனும்
வே றுபல தியாகிகளும்
திக்கதிர முழங்கியதும்
தி ருநெல்லே மண்ணிலன்றே?

குன்றுபல கோவில்கொண்ட
குமரேசன் கடலருகே
சென்றுகுடி யேறியதெம்
திருச்செந்திற் பதியன்றே?
மாத்தமிழர் பெற்றசெல்வ
வளம்பலவே என்ருலும்
தூத்துக் குடி முத்தின்
சுடரொளிக்கு நிகராமோ?
ஆனியில்எம் குற்ருலத்
தருவியிலே தலேகொடுப்பார்
மேனியெலாம் பொன்ஞெளியாய்
மின்ஞெளியாய் மாருதோ?

செந்தமிழர் தம்பேச்சிற்
சிறந்ததெனும் தென்பாண்டிப்
பைந்தமிழும் நெல்வேலிப்
பதிவழங்கும் பேச்சன்றே?
அண்ணச்சி என்றே யாம்
அழைக்கின்ற குரல்கேட்டால்
புண்ஞன நெஞ்சமும்தான்
புளகித்துப் போகாதோ?
முற்றிக் கனிந்த நறும்
முக்கனியும், நெல்வேலி
வற்றல் குழம்பெதிரே
வரிசையிட்டு நின்றிடுமோ?

உண்பார்க்குத் தெள்ளமுதாய்
உவப்பூட்டும் நெல்வேலி
மண்பானைச் சோறுதனை
உண்டவர்கள் மறப்பாரோ?

நெல்வேலி என்றுசொன்னால்
நெல்மணக்கும்; சொல்லுகின்ற
சொல்மணக்கும்; சீமையிதன்
சுடுமண்ணும் தமிழ்மணக்கும்.
எந்நாட் டவர்க்கும்
இறைவனெனச் சொல்லுகின்ற
தென்னாட்டுச் சிவனார்தம்
திருநீறு தான்மணக்கும்.
தொல்லுலகில் பண்டுதொட்டுத்
தொடர்ந்து வளர்ந்து வந்த
நல்லதமிழ்ப் பண்பாட்டின்
நயம் மணக்கும்! இவ்வாறாய்
எண்ணற்ற புகழ்மணக்கும்
எங்கள்திரு நெல்லைக்கு
அண்ணாச்சி! மதினியுடன்
ஆவணியில் வாறிகளா?



# ஐயா, வள்ளுவரே! 6

இந்தக் கவிதை 1969 ஆம் ஆண்டில் தமிழகத்தில் திருவள்ளுவரின் இரண்டா யிரத்து (!) ஆண்டுவிழா கொண்டாடப் பட்டு வந்த சமயத்தில் எழுதப்பட்டது.

1

ஐயா, வள்ளுவரே!
அடியேனுக் கோர்ஐயம்.
மெய்யாகக் கேட்கின்றேன்;
விளையாட்டுப் பேச்சில்லை.
ஐயா! நீர் வாழ்ந்திட்ட
அந்நாளில்—
—[அந்நாள்தான்
எந்நாளோ யானறியேன்.
என்றாலும்,
இப்புவியில் உமையோர்நாள்
ஈன்றெடுத்த தாயவட்கு
ஒப்புடனே மருத்துவச்சி
உத்யோகம் பார்த்தவர்போல்,

குப்புறநீர் குவலயத்தில்
குதித்துவந்த லக்கினத்தைத்
தப்பாது குறித்துவைத்துச்
சாதகமும் கணித்தார்போல்,
ஈராயிரத் தாண்டுகள்முன்
இருந்தவர் நீர் என்றுசிலர்
ஊரறிய உடுக்கடித்து
உருவேற்றி வருகின்ருர்.

வேறு சிலர்—

அத்தனைக்கு மனந்துணிந்து
அடித்துப் பேசுதற்கோ,
சத்தியங்கள் செய்வதற்கோ
சான்றில்லாக் காரணத்தால்,
உத்தேசக் கணக்காக
ஒருசில நூற் ருண்டுகளை
மொத்தத்தில் கழித்துவிட்டு
மொழிகின்ருர்.

ஆதலினுல்,-

எந்நாளில் நீரிருந்தீர்
என்றறியேன்.

என்ருலும்

அந்நாளில்]—

ஐயா! நீர்

ஆக்கிப் படைத்தளித்த
அறநூலை, திருக்குறளை
நோக்குங்கால், நுந்தமது
நோக்கம் குறித்து, தலை
தூக்குகிற தோர் ஐயம்.
சொல்லுகின்றேன்.

தெளிவிப்பீர்.

௬

அந்நாளில் —

காசினியின் ஏனைமக்கள்
காட்டு மிராண்டிகளாய்,
பேசுதற்கும் பழகாத
பிராணிகளாய், நாகரிக
வாசனையே நுகராத
மந்தைப் பிறவிகளாய்
வாழ்ந்து வர,

கல்தோன்றி மண்தோன்றாக்
காலத்தே வாளோடு
முன்தோன்றி விட்டதொரு
மூத்த குடிப்பிறந்து,
தென்றலொடு தான்பிறந்த
தீந்தமிழைப் பேசிவந்த
அன்றைத் தமிழ்மகனே
அறநெறியில், பண்பாட்டில்,
குன்றாப் புகழ் சுமந்து
கொடிகட்டி, வாழ்வியலில்
உச்சாணிக் கொப்பேறி
உயர்ந்திருந்தான், உலகுக்கே
அச்சாணி போலமைந்து
அகிலமெலாம் விதந்தோதி
மெச்சும் படிக்கிங்கு
வீற்றிருந்தான்

என்றெல்லாம்

உச்சந் தலைகுளிர
உரைக்கின்றார் பெரும்பாலோர்.

என்றாலும்—

இத்தகைய பெருவாழ்வை
எய்திச் சிறந்திருந்த
அத்தகைய பொன்னுளில்
அறநெறியைக் கூறுமொரு
புத்தகத்தைத் தானெழுத
ஏனையா புறப்பட்டீர்?

கள்ளர்பய மில்லையெனில்
கதவுக்குப் பூட்டெதற்கு?
வெள்ளைவெயில் அடிக்கையிலே
விளக்கெதற்கு? கண்ணிரண்டும்
தெள்ளத் தெளிவாகத்
தெரிகையிலே கோலெதற்கு?
உள்ளமெலாம் தெளிந்திருந்தால்
உபதேசம் தானெதற்கு?
விள்ளுமையா!
உண்மையில்நான்
விளங்காமல் கேட்கின்றேன்.

3

நீரோ—

வரைவின் மகளிரின்மேல்
வசைபாடித் தீர்க்கின்றீர்!
பிறனில் விழைகின்ற
பேதைமையைச் சாடுகின்றீர்!

கள்ளுண்டு மதிமயங்கிக்
களிப்பாரை, கவருடி
உள்ளதெலாம் தோற்றுவிட்டு
உழல்வாரைக் கடிகின்றீர்!

நடுவூரில் முளைத்தெழுந்த
நச்சுமரம் போன்ற பல
கொடும்பாவிப் பிறவிகளைக்
கோபமுடன் தாக்குகின்றீர்!

சொற்புத்தி கேட்பதற்கும்
சுரணைகெட்டுச் சீரழிந்த
அற்பப் பிறவிகளை
ஆலைக் கரும்பெனவே
பிழிந்தெடுத்தா லன்றி பயன்
பெறுவதற்கே இல்லையென்றும்
மொழிகின்றீர்!

வறியவர்க்கோர் வாய்க்குணவு
வழங்காத லோபியரை
இருசெவிட்டில் அறைந்தால்தான்
ஏதேனும் தருவரென்றும்
உரைக்கின்றீர்!

யாசித்தே உயிர்பிழைக்க
வேண்டுமெனில், நமைப்படைத்த
ஈசனுமே திருவோட்டை
ஏந்தித் திரிகவென்றே
கூசாமல் வசைபாடிக்
குவிக்கின்றீர்!

இவ்வாறு —

இனிய உளவாக
இன்னாத கூறுவது
கனியிருப்பக் காய்நுகரும்
காரியமே ஆகுமெனச்

சொல்லும் நீர்,
இவரையெலாம்
சுடுசொல்லால், கொடுஞ்சொல்லால்
கொல்லு கொல்லு எனக்குத்திக்
குடலைப் பிடுங்குவதேன்?

4

மேலும் நீர்—
கல்லாமை, பிறனில்மேல்
காமம் விழையாமை,
கொல்லாமை, புலாலுண்டு
கொழுக்காமை, கள்ளாமை
என்றெல்லாம்

எல்லாம் எதிர்மறையாய்
ஏனையா பாடிவைத்தீர்?
இல்லாது போய்விட்ட
இயல்பைத்தான், நெறியைத்தான்
நல்லபடி யாய்உணர்த்தி
நவில்வதுவே பெருவழக்காம்.

நல்லாராய், நயத்தக்க
நாகரிகம் தெரிந்தவராய்.
பல்லோரும் பாராட்டும்
பண்பாட்டைக் கற்றவராய்
எல்லோரும் சிறந்தோங்கி
இருக்குங்கால்,
ஏனையா
கொல்லர் தெருவழியே
கொண்டூசி விற்பதுபோல்
நல்லறத்தை வலியுறுத்த
நாட்டம் நீர் கொண்டுவிட்டீர்?

ஆதலினால்—

வையகத்தே வாழ்வாங்கு
வாழும் நெறியிதென,
ஐயா! நீர் கூறவந்த
அவசியத்தை, அடிப்படையை,
மெய்யான காரணத்தை
மறைக்காமல் விளம்பிடுவீர்!

5

ஒருவேளை—

நீர்வாழ்ந்த காலத்தின்
நிலையதனைப் பண்பாட்டின்
சீர்மலிந்த சிகரமெனச்
செப்புவதும் பொய்தானோ?

அறநெறியை இத்தனைக்கு
அழுத்தமுடன் வலியுறுத்தி
வரையறுக்கும் நிர்ப்பந்தம்
வாழ்வில் இருந்ததுவோ?

முப்பாலில் நீர்விளக்கி
மொழிகின்ற நன்னெறிக்கே
அப்பாலாய்த் தான்வாழ்க்கை
அன்றைக் கிருந்ததுவோ?

இத்தகையோர் என்றேநீர்
இனங்காட்டி இடித்துரைக்கும்
அத்தகைய கயவரெலாம்
அந்நாளில் இருந்தாரோ?

பொல்லாங்கே நித்தநித்தம்
புரிந்தாலும், உலகினர்முன்
நல்லார்போல் படங்காட்டி
நடிப்பதனால், பொன்னுடை,

வல்லாட்டு, வரவேற்பு,
வாழ்த்துப்பா, புகழ்மாலை
எல்லாமும் பெற்றுசிலர்
ஏற்றங்கள் பெறுவதனால்,
புல்லர்களும் மக்களையே
போல்வரென்று நீர்தாமும்
சொல்லாமற் சொல்லியவர்
சூழ்ச்சிகளைச் சொன்னீரோ?

பஞ்சமா பாதகத்தில்
பழுத்துக் கொழுத்தவர்கள்
அஞ்சாது புரிந்துவந்த
அக்கிரமச் செயல்கண்டே
நெஞ்சு கொதித்தேயிந்
நீதியினை வகுத்தீரோ?
நெஞ்சாரக் கேட்கின்றேன்.
நிசத்தைச் சொல்லுமையா!

6

இத்தனைக்கும் மேல், ஐயா!
இன்னும் ஒரு விஷயம்:

இன்றைக்கும் உமையிங்கு
இழுத்துப் பறித்துவந்து,
என்றைக்கும் இல்லாத
ஏற்றம் உமக்களித்து,
மன்றெல்லாம் விழாவெடுத்து
வள்ளுவர்தம் குறள்நெறியில்
நின்றிடுவோம், என்றென்றும்
நீங்காப் புகழ்பெறுவோம்
என்றெல்லாம்—

ஆராரோ இந்நாளில்
அரங்கேறி நின்றுகொண்டு
ஊரார்க் குபதேசம்
உரைக்கின்றார்.

ஒருவேளை
இன்றைக்கும் நீர்உமது
அறநூலில் இனங்காட்டிச்
சென்றிட்ட வன்கொடிய
சிறுமைகளும் தீமைகளும்
என்றைக்கும் இல்லாத
அளவுக்கு எம்மிடையே
பொன்றாது இருந்துவரும்
போக்குத்தான்
இன்றுமக்கு உள்ள புகழ்
இத்தனைக்கும் காரணமோ?



# நேசித்தேன்; நேசிப்பேன்! 7

ஏசு கிருஸ்துவைப்பற்றிப் பதினாரும் நூற்ருண்டில் எழுதப்பட்ட ஒரு ஸ்பானியக் கவிதையின் தமிழாக்கம். மூல ஆசிரியரின் பெயர் தெரியவில்லை.

*

ஏசுப் பெருமகனே!
எந்நாளும் நானும்மை
நேசித்தேன்; நேசிப்பேன்;
நேசித்துக் கொண்டிருப்பேன்!
பரலோக வாழ்வினுக்குப்
பாதையிது என்றே நீர்
உரைசெய்தீர் என்பதனுல்
உள்ளத்தே உமைப்போற்றி
வரவில்லை; அஃதேபோல்
வாதைதரும், துன்புறுத்தும்
நரகுலகின் அச்சத்தால்
நடுக்குற்று, உமக்கெதிராய்த்
தீய செயல்பலவும்
செய்யாது, நானுலகில்
தூய வழிநடக்கத்
துணிந்திட்டேன் என்பதில்லை!

ஏசுப் பெருமகனே!
என்ருலும் நானும்மை
நேசித்தேன்; நெஞ்செல்லாம்
நெகிழ்ந்தும்மை நேசித்தேன்!

ஆணிபல கொண்டறைந்து,
　　அவமதித்து, சிலுவைமரத்
தூணின்மேல் உமையேற்றித்
　　துன்பிழைத்த கொடுமையையும்,
நீணிலத்தில் உமக்கிழைத்த
　　நிட்டூரச் செயல்களையும்
காணுங்கால், உள்ளமெலாம்
　　கரைந்தும்மை நேசித்தேன்!

அவமானம் பலபட்டும்,
　　அருவியெனக் குருதிபெயும்
தவமேனி சதைப்புண்டும்,
　　தாரணியில் கொடுந்துன்பைச்
சுமந்தாவி தனைவிடுத்த
　　துயர்க்கோலம் தனைக்காணும்
சமயத்தே உள்நெகிழ்ந்து
　　தளர்ந்தும்மை நேசித்தேன்!

சொல்லுமொரு பரலோகச்
　　சுகவாழ்வும் பெருவாழ்வும்
இல்லையெனப் போனாலும்
　　என்றுமுமை நேசிப்பேன்!
அல்லற் பலபடுத்தும்
　　அருநரகம் என்றொன்று
இல்லையெனத் தெரிந்தாலும்
　　என்றுமுமக் கஞ்சிடுவேன்!
உம்மையே நேசிக்கும்
　　உறுதிக்காய் உம்மிடத்தே
கைம்மாறு தனைநோக்கிக்
　　காத்திருப்போ னல்லேன்யான்!

ஏனென்றால், என்வாழ்வில்
　　எதிர்பார்க்கும் எதனையுமே
நானடைவேன் எனுமுறுதி
　　எனக்கில்லை யென்றாலும்
ஏசுப் பெருமகனே!
　　எந்நாளும் நானும்மை
நேசிப்பேன்; நேசித்தேன்;
　　நேசித்துக் கொண்டிருப்பேன்!

காந்தியடிகள் தனிநபர் சத்தியாக்கிரகத்தை நடத்தி வந்த காலத்தில் 15.2.1941 அன்று மகாகவி ரவீந்திரநாத தாகூர் எழுதிய கவிதையின் தமிழாக்கம் இது. தாகூர் தமது அந்திம காலத்தில் எழுதிய கவிதைகளில் இதுவும் ஒன்ருகும். ஆங்கிலேய அரசாங்கத்துக்குக் குருதேவர் விடுத்த வீராவேசம் மிகுந்த சவாலாக இக் கவிதை அக்காலத்தில் விளங்கியது.

இந்தத் தமிழாக்கம் மதுரையிலுள்ள காந்தி பொருட்காட்சி மண்டபத்துக்காக எழுதிக் கொடுக்கப்பட்டது.

# காந்தி மகான்... 8

காந்திமகான் காட்டுகின்ற மார்க்கம் தன்னைக்
கடைப்பிடிக்கும் எம்மவர்தம் இதயம் தன்னில்
போந்திருக்கும் குறிக்கோளும் பொதுவாம்; ஒன்றும்.
பொருள் சேர்க்கும் எண்ணத்தால், வறுமைப் பட்டுக்
காந்துகின்ற ஏழையரைச் சுரண்டி வாழோம்;
கணக்கற்ற பெருநிதியக் கடலில் இன்பம்
மாந்துகின்ற செல்வர்தமைப் பணிந்து வாழ்த்தி
மண்டியிட்டுத் தலைகுனிந்து வாழோம், வாழோம்! 1

ஓங்கியதோர் கையோடும், உடலைத் தாக்கும்
உறுதியோ டுயர்த்தியதோர் தடியும் கொண்டே
ஆங்கவர்கள் நமைத்தாக்க முனைந்த போதும்
அன்னவரைப் புன்னகையோ டணுகி, 'ஐயா!
தூங்கியெழும் குழந்தையெனில் உங்கள் சீற்றத்
தோற்றத்தைக் கண்டஞ்சக் கூடும்; ஆனால்
சாங்காலம் வந்தாலும் அச்சம் காணாச்
சாதகர்தாம் அஞ்சுவரோ?' என்றே கேட்போம்! 2

எங்களது பேச்செல்லாம் நேர்மை யோடும்
எளிமையொடும் இருப்பதலால், வார்த்தை தன்னைத்
தங்களது விருப்பம்போல் திரிக்கும் ராஜ
தந்திரத்தைச் சேர்ந்ததில்லை! அதற்கு மாருய்
எங்களது பேச்செல்லாம் சட்டம் தன்னை
எடுத்தெறிந்து பேசுவதால் எம்மை யெல்லாம்
வெங்கொடுமைச் சிறைக்கோட்ட வாயில் நோக்கி
விரைந்திழுத்துக் கொண்டேகிச் செல்லும், செல்லும்! 3

சிறைக்கோட்டம் செல்லுகின்ற பாதை யெல்லாம்
தியாகியர்தம் திருக்கூட்டம் சேரச் சேர,
கறைப்பட்ட அவமானக் களங்கம் எல்லாம்
கரைந்தழிந்து மறைந்தொழியும்; பன்னூற் ருண்டாய்த்
தறையிட்டுப் பூட்டிவைத்த தளைகள் யாவும்
தவிடுபொடி யாகிவிடும்! தருமப் போரில்
சிறைப்பட்ட வீரர்களின் நுதலில், காந்தி
திலகமிட்ட நல்லாசி இலகித் தோன்றும்!



## புகழ் பூத்த தாமரையே! 9

தமிழ் நாடு கலை இலக்கியப் பெரு மன்றத்தின் முதற் பெரும் தலைவரும், 'தாமரை' பத்திரிகையின் ஆசிரியரும், பொதுவுடைமை இயக்கத் தலைவரும், சிறந்த பேச்சாளரும், இலக்கிய அறிஞருமான ப. ஜீவானந்தம் (ஜீவா) 18.1.1963 அன்று அமரரான சமயத்தில் பாடிய இரங்கற்பா.

*

நெடுவானில் நடுப்பகலில் கதிரோன் தன்னை
நெருப்பவித்தே ஒளிபறித்து மறைத்தாற் போலே
தொடுவானம் கிழித்துயரும் இமய வெற்பைத்
துடைத்தெடுத்து வெம்பரப்பாய்த் தூர்த்தாற் போலே
அடிவானம் தனைவளைக்கும் கடலை முற்றும்
அரைநொடியில் குடித்தேப்பம் விட்டாற் போலே
படுபாவி எமனே! எம் ஜீவா தன்னைப்
பறித்தெடுத்தேன் சூனியத்தைப் பரப்பிச் சென்றாய்? 1

சோவியத்துத்திருநாடு சென்ற நீயும்
சுகம்பெற்றேன் தெம்புற்றேன் என்றாய்; அந்தக்
காவியத்துப் புதுவாழ்வைக் கண்ணுற் கண்ட
களிப்பதனால் நெடுங்காலம் வாழ்வேன் என்றாய்.
ஆவியெலாம் குளிரவதைக் கேட்டோம்; அந்த
அகமகிழ்வை மண்ணாக்கி, ஐயா! ஜீவா!
ஓவியத்துப் பதுமையெனக் கண்ணை மூடி
உன்வாக்கைப் பொய்யாக்கி ஏனோ சென்றாய்? 2

வாய்ப்பூட்டுச் சட்டத்தால் மூடா வாயும்,
வன்கொடியர் விலங்கிட்டும், சிறையி லிட்டும்
காய்ப்புண்ட காலத்தும் தளரா மார்பும்,
காலமெலாம் தாயகத்தைச் சுற்றிச் சுற்றித்
தேய்ப்புண்ட காலத்தும் ஓய்வைத் தேடாத்
திருவடியும், துயிலறியா திருந்த கண்ணும்,
சாய்ப்புண்டு போயினவே! ஜீவா! உன்றன்
சடலத்தைக் காண்பதற்கோ உடலம் பெற்றோம்? 3

மேடையில்நீ ஏறிவரக் கண்டால் எங்கள்
மேனியெலாம் சிலிர்த்ததுண்டே! மேடை மீதுன்
கோடையிடி முழக்கத்தைக் கேட்டே உள்ளம்
குதியாட்டம் போட்டதுண்டே! கொடியோர் தம்மை
தாடையிலே அறைந்தாற்போல் பேசும் அந்தத்
தமிழ்கேட்டுப் பூரித்த துண்டே! உன்னைப்
பாடையிலே சுமந்தெடுத்துச் செல்லும் அந்தப்
பரிதாபம் காண்பதற்கோ பறந்து வந்தோம்? 4

சாக்காட்டுப் பாதையிலே நோகும் மக்கள்
சமூகத்தைக் கரையேற்றி, விழிகள் ஈந்தாய்;
நோக்காட்டைப் போக்குமொரு மார்க்கம் செல்லும்
நோன்பேற்றாய்; பொதுவுடைமை என்னும் செய்ய
பூக்காட்டைப் பயிராக்க வாழ்நாள் முற்றும்
போராடி வாழ்ந்திட்டாய்! ஜீவா! உன்னைத்
தீக்காட்டில் வேகவிட்டுக் கண்ணீர் சிந்தித்
திரும்புதற்கோ நாங்களெலாம் கால்கள் பெற்றோம்? 5

பாரதியை வேதாந்தச் சிமிழில் தள்ளிப்
பஜனைசெயும் பண்டாரப் பதகர் கூட்டம்
வேரதிர, இடிமுழக்கம் செய்தே, அந்த
வீரனை நீ இனங்காட்டி விளக்கி, செம்பொன்
தேரெதிரே வந்தாற்போல் தமிழர் நாட்டில்
திக்விஜயம் செய்தனையே! ஜீவா! உன்னைப்
பூரதத்தில் காண்பதற்கோ கண்கள் பெற்றோம்?
புகழ்பூத்த தாமரையே! எங்கே போனாய்? 6

கன்னல்நறுஞ் சாறனைய தமிழில் நல்ல
கவிப்பொருளை எடுத்தெடுத்து விளம்பும் எங்கள்
மன்னவனே! தமிழ்ப்புலவ! வரம்போல் வந்த
மாணிக்கப் பெருங்குன்றே! கலைஞர் தங்கள்
அன்னையென வாழ்ந்தவனே! அறப்போர் வீர!
அறிவுலகின் தவக்கொழுந்தே! அருமை ஜீவா!
உன்னருமைத் தோழரெமைப் பிரிந்தாய்! எம்மை
உலையாத துயரத்தே ஆழ்த்திச் சென்றாய்! 7

எம்மைவிட்டு நீ பிரிந்தாய்; எனினும் எங்கள்
இதயம்விட்டு நீ பிரிந்தா யில்லை, இல்லை!
வெம்மைதரும் சோதனைகள் மிகுந்த போதும்,
வேதனைகள் எமைவருத்தும் போதும், உன்றன்
செம்மைமிகும் பெருவாழ்வை, பணியை, எங்கள்
சிந்தையிலே உருவேற்றிச் சிரத்தைத் தூக்கி
உம்மருமை லட்சியத்தில் ஊன்றி நிற்போம்!
உறுதியிது, உறுதியிது, உறுதி யிஃதே! 8

# தருமப் போர்த் தளபதியே! 10

இந்தப் பாடல் சோவியத் நாட்டின் தந்தையாக விளங்கிய லெனினைப் பற்றி அவரது பிறந்த தின விழாவொன்றின்போது பாடிய வாழ்த்துப்பா.

*

ஏர்முகத்தில் பயிர்விளைத்து வையம் காக்கும்
ஏழையரைப் பீரங்கிக் கிரையாய் மாற்றிப்
போர்முகத்தில் பலிகொடுக்கும் புன்மை போக்கிப்
பொதுவுடைமைப் புதுவாழ்வில் தொழில்கள் எல்லாம்
கார்முகில் போல் வளஞ்சுரந்து, வறுமை நீங்கி,
கடவுளர்போல் மக்களெலாம் களிப்புற் றோங்கிச்
சீர்மலியும் வகையுணர்த்திச் சென்ற மக்கள்
சேவகனே! நின்புனித நாமம் வாழி! 1

மாயிருளில் படுகுழியில் வீழ்ந்து, மீளும்
மார்க்கத்தை அறியாத ருஷிய மக்கள்
ஆயிரங்கால் பூதமெனத் திரண்டெ ழுந் ருகி
அரசுகொளும் முரசறைந்து, ஆரண் யத்துப்
பேயரசாம் ஜாரரசைப் பேர்த்து, தங்கள்
பேரரசை நிலைநாட்டிப் புதுமை வாழ்வின்
தாயகத்தைத் தம் நாட்டில் தழைக்கச் செய்த
தருமப்போர்த் தளபதியே! வாழி! வாழி! 2

உரம்மிகுந்த கரவலியால் உழைப்போர் தங்கள்
உரிமைகளைப் பறித்தவர்தம் உழைப்பைத் தின்று
தரமுயர்ந்த செல்வரென்றும், தருமர் என்றும்
தருக்கியவர் செருக்கடக்கி, தரணி தன்னில்
கரமுடை யோர் யாவருமே உழைத்தே யுண்ணும்
கட்டளையைச் செயல்நடத்தி, கடைப்பட்டோரின்
சிரமுயரச் செய்யுமொரு தியாக கேள்வித்
தீயிடையே உருக்கான திறலோய் வாழி! 3

வையகத்துத் தொழிலாளர் நாளும் தாங்கள்
வறுமையொடு போராடும் மருமம் தன்னை
ஐயமறத் தெளிந்துணர்ந்து கைகள் கோத்தால்,
அணிவகுத்தால், படைதிரண்டால், அறப்போர் மூண்டால்,
கையறுத்த தளைநொறுங்கக் காண்பார்! அன்றே
காசினியும் தமதாகக் காண்பார்! என்றே
மெய்யறிஞன் மார்க்சுரைத்தான்! அவன்றன் வாக்கை
மெய்யுரையாய் ஆக்கிவைத்த மேதாய் வாழி! 4

பகுத்துண்டு பல்லுயிரும் ஓம்பி வாழும்
பண்பாட்டைப் பாவலர்கள் பல்லாற் றானும்
வகுத்துரைத்துச் சென்றதெலாம் நனவே யாகி
வாழ்க்கையிலே வடிவெடுக்க, பிறர்தம் வாழ்வைச்
செகுத்துண்டு வாழ்ந்தார்தம் சூழ்ச்சி யாவும்
சென்றொழிய, பொதுவுடைமை நியதி தன்னைப்
புகுத்தியிந்த உலகுக்கே விளக்கம் ஏந்திப்
போந்தவனே! லெனினென்னும் புகழோய் வாழி! 5

# கலி முடித்த புரட்சி 11

"இடிபட்ட சுவர்போலே கலி விழுந்தான்; கிருத யுகம் எழுக மாதோ'' என்று ருஷ்யாவில் நிகழ்ந்த அக்டோபர் புரட்சியை வாழ்த்தி வர வேற்றுப் பாரதநாட்டில் முதற்குரல் எழுப்பினன் பாரதி. அந்த ருஷ்யப் புரட்சியின் ஆண்டு விழா ஒன்றின்போது எழுதப்பட்ட பாடல் இது.

*

காவியத்தில் கற்பனையில் கதையில் மற்றும்
கட்டுரையில் கண்டறியாப் புதுமை எல்லாம்
சோவியத்தில் ஒரு புதுமை இல்லை, பொய்மைச்
சொப்பனமும் இல்லையெனப் பல்லோர் மெச்சும்
பாவனையில் சொர்க்கபுரி தன்னை இந்தப்
பாரகத்தே உருவாக்கி, மக்கள் தம்மைத்
தேவர்குலம் என அமரர் சிறப்புற்றோங்கச்
செய்தநவ யுகப்புரட்சி வாழி! வாழி! 1

இரந்துண்ணும் வாழ்வில்லை; மக்கள் தம்மை
ஏமாற்றிச் சுரண்டுவதால் செல்வம் சேர்த்துக்
கரந்துண்ணும் புல்லுருவிக் கூட்டம் இல்லை;
களவில்லை; அளவில்லாச் செல்வம் எல்லாம்
நிரந்துண்ணும் புதுவாழ்வு; பொதுமை வாழ்வு;
நீடுலக மக்களெல்லாம் தம்மைத் தாமே
புரந்துண்ணும் வாழ்வு - என்னும் பொதுமை ஞான
போதனையைச் சாதித்த புரட்சி வாழி! 2

துன்மதியர் போர்வெறியர் லாபக் கொள்ளைச்
சூதாட்டக் காரர்செயும் துன்பை யெல்லாம்
கன்மவினை சென்மவினை என்றே எண்ணிக்
கண்ணிழந்து கருத்தழிந்து கிடந்த மாந்தர்
தன்மதிப்பை, தம்குலத்தை, தம்ப லத்தைத்
தானுணரச் செய்தவர்க்கே தலைமை தாங்கி
நன்மதிப்பின் புத்துலகைச் சமைத்துக் காட்டி
நானிலத்தும் புகழ்படைத்த புரட்சி வாழி! 3

கொலை வாழ்வை நச்சுகின்ற யுத்தப் பித்தம்
கொண்டவர்கள் உலகமக்கள் தம்மைப் பிச்சைப்
புலைவாழ்வுக் குட்படுத்தும் புன்மை தன்னைப்
போக்குதற்கோர் ஆக்கநெறி புகன்று, மக்கள்
கலை வாழ்வும் களிவாழ்வும் காதல் வாழ்வும்
கன வாழ்வும் மிகப்பெற்றுச் சிறந்தெந் நாளும்
நிலைவாழ்வு வாழுமுறை வகுத்துக் காட்டி
நிலைபெற்றுக் கவிமுடித்த புரட்சி வாழி! 4

'உழைக்கின்ற மக்களுக்கே உலகம்' என்றே
உலகவியல் கண்டுசொலி, உலகைத் தன்பால்
அழைக்கின்ற மார்க்ஸீய மார்க்கம் சென்றே
ஆறிலொரு பூவுலகில் புதிய வாழ்வைத்
தழைக்கின்ற படிச்செய்து, ருஷிய மக்கள்
தளையறுத்து, வெங்கொடுமை நரக வாதை
இழைக்கின்ற கொடுங்கோலர் சூழ்ச்சி வென்று
ஏற்றமுற்ற அக்டோபர் புரட்சி வாழி! 5

இமயத்தின் எல்லைநமைப் பிரித்திட் டாலும்
இதயத்தால் பிரியாதோம் என்றுங் குற்ற
தமையனைப் போல், தாதையைப்போல், பசியை ஆற்றும்
தாயைப்போல் எம்மிடத்தே பழகி, தக்க
சமயத்தில் பல்லுதவி நல்கி, இன்றைச்
சகவாழ்வுக் கொள்கைக்கோர் சான்று யாகி
அமைகின்ற நல்லுறவு சிறக்க அன்றே
அடியெடுத்துக் கொடுத்திட்ட புரட்சி வாழி! 6

பிற்பட்ட நாடுகளின் சுதந்தி ரத்தைப்
பேணிநிற்கும் கவசமெனப் பெற்றாய்! வாழ்வில்
முற்பட்டுச் சிறக்கவெணும் நாடு கட்கோ
முந்திவந்தே உதவிசெயும் வள்ளல் ஆனாய்!
அற்பத்துப் புத்தியினால் அழிவார் தம்மை
அறிவுறுத்தும் சற்குருவும் ஆனாய்! எங்கள்
கற்பகமே! வழித்துணையே! உலகோர் நாடும்
கலங்கரையின் ஒளிவிளக்கே! வாழி! வாழி! 7



# பல்லாண்டு பாடிடுவோம்! 12

இந்தக் கவிதை அக்டோபர் புரட்சியின் பொன்விழா (1967) ஆண்டில் எழுதப்பட்டது.

*

சோவியத்துத் திருநாடே!
சோஷலிசத் தாயகமே!
காவியத்துப் புலவோர்கள்
காசினியின் மக்கள்குலம்
ஓர்குலமாய் ஓரினமாய்
ஒருங்கிணைந்து, வாழ்க்கையினில்
சீர்பலவும் பெற்றுயரச்
செய்தபல கற்பனைகள்
நனவாக, அன்றாட
நடப்பாக, வையகத்தின்
மனிதகுலம் அனைத்துக்கும்
வழிகாட்டும் விளக்காக,
புதுநெறியை, வாழ்முறையை
பொதுவுடைமைப் பெருவாழ்வை
முதன்முதலில் தோற்றுவித்த
முன்னவனே! வாழிய நீ!

மாமேதை லெனின்வகுத்த
வழிநின்று, புத்துலகைப்
பூமியினில் படைத்தளித்த
சரித்திரத்தின் பொன்னேடே!
அவனியெலாம் போற்றுகின்ற
அக்டோபர் புரட்சியினால்
புவனத்தின் இருள்கடிந்து
பொங்கிவந்த பொற்சுடரே!
உழைப்பவர்க்கே உலகமெனும்
உண்மையினை நடைமுறையில்
தழைத்தோங்கச் செய்திட்ட
தலைமகனே! வாழிய நீ!

அடிமைச் சிறையெனவே
அகன்றிருந்த பெருநாட்டில்
மிடிமையிலும் வறுமையிலும்
மெலிந்து நலிந்தமக்கட்
குலமதற்கு வாழ்வளித்து,
கொடுமைகளைக் களைந்துலகில்
தலைநிமிர்ந்து நிற்கவைத்த
சாதனையே! வாழிய நீ!

நூறுமொழி பேசிவந்த
நூற்றினத்து மக்கள்தமைக்
கூறுசெய்து ஜாரரசன்
கோலோச்சி வந்ததெலாம்
வேரோடு அடிசாய்ந்து
வீழ்ந்துபட, மக்களெலாம்
ஓரினமாய் வாழவைத்த
ஒன்றியமே! வாழிய நீ

அறியாமை இருட்சேற்றில்
அமிழ்ந்து கிடந்தவரும்
பெருஞான ஒளிபெற்றுப்
பிறங்கவைத்த பேரொளியே!
மேதினியின் மக்களெலாம்
வேற்றுமைகள் தமைக்களைந்து
சோதரராய் வாழ்முறையைச்
சொல்லிநின்ற சற்குருவே!

சுதந்திரத்தின், சமத்துவத்தின்,
சோதரத்வ தத்துவத்தின்
உதாரணமே! சோவியத்து
ஒன்றியமே! நின்புகழைச்
சந்ததமும் பல்பொருளைச்
சமைத்துக் குவிக்குமுன்றன்
எந்திரங்கள் அயராது
எழுப்புகின்ற பேரொலியில்,

கூட்டுறவுப் பண்ணைகளில்
கொழித்துச் செழித்து, தலை
ஆட்டுகின்ற பொற்கதிரின்
அழகுத் திருக்கொலுவில்,
பாலைவனப் பரப்பையெலாம்
பழத்தோட்டம் மலர்த்தோட்டம்
சோலைவனம் என்றாக்கும்
சோதனையின் வெற்றியினில்,

காவியத்தைத் தம்கருத்தால்
கரத்தால் படைத்துவரும்
சோவியத்து மக்களர்தம்
உழைப்பின் சுறுசுறுப்பில்,
விண்ணரங்கில் சென்ற கலம்
வெள்ளிக் கிரகமதன்
மண்ணதனை ஆய்ந்துசொலும்
மகத்தான சாதனையில்,

போர்வெறியர் சூழ்ச்சிகளைப்
புறங்கண்டு, சாந்தியினைப்
பாரகத்தில் நிலைநாட்டப்
பாடுபடும் பண்பாட்டில்,
வளருகின்ற நாடுகட்கு
வாரி வழங்கிவரும்
அளப்பரிய உதவிகளால்
அவையடையும் வெற்றிகளில்,

தாயகத்தின் விடுதலைக்காய்ச்
சமர்விளைப்போர் தமக்கெல்லாம்
ஆயபல உதவியெலாம்
அளித்துவரும் ஒப்புரவில்
இனம்கண்டே மகிழும்யாம்
இன்றுன்பொன் விழாநாளில்
மனமாரப் பல்லாண்டு
பாடியுனை வாழ்த்திடுவோம்!



# எமக்கினியோர் தூரமில்லை! 13

சோவியத் நாட்டைச் சேர்ந்த கெர்மன் தித்தோவ் என்ற இளைஞர் விண்வெளிக்கலம் ஒன்றில் ஏறி அண்டவெளிக்குச் சென்று பூமண்டலத்தைப் பதினேழு முறை வலம் வந்து பூமிக்குத் திரும்பினார் என்ற வியத்தகும் செய்தியை அறிந்த வேகத்தில் எழுந்த கவிதை இது.

*

சந்திரனே! சுக்கிரனே! ஜாக்கிரதை! ஜாக்கிரதை!
எந்தப் பெருந்தொலைவும் எமக்கினியோர் தூரமில்லை!
உந்திப் பறந்துவந்து உன்மடியில் யாம்தவழும்
அந்தத் திருநாளும் அணித்தாகக் கண்டுவிட்டோம்! 1

கந்தருவச் சுந்தரர்கள் ககனத்தே திரிந்துலவும்
விந்தைக் கதைகளெல்லாம் விஞ்ஞான வெற்றியினால்
சந்ததமும் யாம்காணும் சாதனையாய், சாட்சியமாய்
எந்தம் கண்முன்னால் இயங்குவதும் கண்டுவிட்டோம்! 2

காற்றுலகம் தனைத்தாண்டி, ககனத்து வெளிதாண்டி
வேற்றுலகம் அத்தனைக்கும் விஜயங்கள் பலபுரிந்து
நாற்றிசையும் புகழ்மணக்க நாம்திரும்பும் பொற்காலம்
தோற்றுவதைக் காண்பதற்குத் துவஜங்கள் கட்டிவிட்டோம்! 3

வான்முகட்டின் அயனகதி வட்டத்தே வழிவகுத்துத்
தான் வகுத்த தடத்தினிலே தப்பாது சென்றுவரும்
பான்மையிலே ஏவுகணை படைத்துவிட்ட சோவியத்தின்
மேன்மையினைக் கண்ணார மேதினியில் கண்டுவிட்டோம்! 4

அன்றொருநாள் வானத்தின் அயனவெளி வீதியிலே
சென்றோர் வளையமிட்டுத் திரும்பிவந்த செய்தியினை
மென்றே விழுங்குமுனம் விந்தையிலும் விந்தையதாய்
இன்றோர் அதிசயத்தை எம்வாழ்வில் கண்டுவிட்டோம்! 5

உலகத்தை விட்டகன்றே ஒருநாள் பொழுதனைத்தும்
விலகியிருந் தயனத்து வீதியிலே விசைபிறக்க
வலந்திரிந்து மீண்டுவந்த வ லாளன் சோவியத்தின்
திலகமவன் தித்தோவின் திருப்பணியைக் கண்டறிந்தோம்! 6

ஆங்குசென்றும், தித்தோவே! அயனத்துப் பயணமதில்
தூங்கிடவும் நீ செய்தாய் என்னுமொரு சொல் கேட்டும்,
ஓங்கிநின்ற நின்துணிவை, உன்புகழை யாமறிந்தும்,
வீங்கியுளம் புடைத்தே விம்மிதங்கள் ஆகுதையா! 7

ஈர்த்திழுக்கும் பூப்பரப்பின் எல்லைதனைக் கணத்தில்நீ
பேர்த்தெறிந்தாய்! பதினேழுப் பிரதட் சணம்செய்தே
பார்த்திட்டாய்! பெற்றெடுத்த பாருலகம் மீண்டு வந்தாய்!
கீர்த்தியிதைக் கேட்டு தலை கிறுகிறுத்துப் போகுதையா! 8

வானவெளி வீதியிலே வலந்திரியும் வேளையிலும்
மாநிலத்து மக்களுக்கு வாழ்த்துரைத்த நின்வாக்கு
தேனடையாய், தெள்ளமுதாய், திருவாய் மொழிதானும்,
கானமழை போலாய் எம் காதில் இனிக்குதையா! 9

காவியத்துப் பொன்னுலகைக் கண்காணும் நனவாக்கி
மாவியப்பில் எந்நாளும் வையகத்தை ஆழ்த்திவரும்
சோவியத்தின் தவமகனே! சோதரனே! நினையிந்நாள்
சேவிப்போம்! உன்றனுக்கு ஜெயபேரி கொட்டிடுவோம்! 10

# வாழ்த்துகிறேன், வியத்நாமே! 14

அமெரிக்க ஆக்கிரமிப்பை எதிர்த்துப் பல்லாண்டுகளாக வீரப்போர் விளைத்து வந்த வியத்நாமை வாழ்த்திப் பல தமிழ்க் கவிஞர்கள் எழுதிய கவிதைகளைப் பாமாலையாகத் தொகுத்து, 'வெல்க வியத்நாம்' என்ற தலைப்பில் 1969ல் அறந்தை நாராயணன் வெளிக் கொணர்ந்த நூலுக்கு 'அணிந்துரை' யாக எழுதிக் கொடுத்த கவிதை இது.

*

வாழ்த்துகிறேன், வியத்நாமே!
 வாயார வாழ்த்துகிறேன்!
பாழ்த்துப் புலை நாறும்
 பாசிச வல்லரக்கர்,
ஆயுதங்கள் மிகுந்திருக்கும்
 ஆணவத்தால் இவ்வுலகை
வாயிலிட்டுப் பசியாற
 வழிபார்க்கும் அமெரிக்கர்,
நின்னாட்டின் மீது நித்தம்
 நெருப்பு மழை பொழிந்தாலும்,
பொன்னாட்டின் கழனிகளைப்
 புகை நாறச் செய்தாலும்,

குண்டுகளைக் கணக்கின்றிக்
    கொண்டுவந்தே எறிந்தாலும்,
பெண்டுகளைப் பிள்ளைகளைப்
    பிணமலையாய்க் குவித்தாலும்,
நப்பாம் குண்டுகளால்
    நச்சுக் கிருமிகளால்,
துப்புரவாய் உன்குலத்தைத்
    துடைத்தெறியப் பார்த்தாலும்,
அஞ்சாது போர்புரிந்து
    ஆதிக்க வெறியர்களைப்
பஞ்சாய்ப் பறக்கடித்துப்
    பாருலகம் போற்ற நின்றாய்!

கண்ணான சுதந்திரத்தைக்
    காவுகொளப் பார்த்தவரை
மண்ணோடு மண்ணாக்கி
    வையமெலாம் போற்ற நின்றாய்!
வெங்கொடியர் தமைஎதிர்த்து
    வீரப்போர் புரிந்துனது
செங்குருதித் தீர்த்தத்தால்
    திருநாட்டைக் காத்துநின்றாய்!

சத்தியத்தை யாராலும்
    சாகடிக்க முடியாது;
யுத்தத்தால் மக்கள்தமை
    ஒடுக்கிவிட ஏலாது;
அணுவைப் பிளந்தெறியும்
    அசகாய சூரர்களும்
அணுவளவும் ஆத்மாவை
    அசைத்துவிட முடியாது;
மக்கள் திரண்டெழுந்தால்
    மாமலையும் தூளாகும்;
மக்களது ஒற்றுமை முன்
    மலைப்பாம்பும் புழுவாகும்!

என்றிடுமோர் உண்மையினை
இவ்வுலக மாந்தரெலாம்
இன்றுணரும் உதாரணமாய்
இலங்கிப் புகழ் சுமந்தாய்!

தாயகத்தின் பக்திக்கோர்
சான்ருகத் திகழ்ந்துலக
நாயகமாய், மானிடர்தம்
நம்பிக்கை யாய்த்திகழ்ந்தாய்!
மானிடர்தம் நெஞ்சுரத்தின்
வலிமைக்கோர் உரைகல்லாய்த்
தானிலங்கும் வியத்நாமே!
தலைதாழ்த்தி வணங்குகிறேன்!

ஆசியத்தின் ஜோதியென
அகில மெலாம் பாராட்ட
வீசுபுகழ் பரப்பி வரும்
வியத்நாமே வாழ்த்துகிறேன்!
நின்னுட்டைப் பாழ்படுத்தும்
நீசர்களை நீருக்க
உன்னோடு நாங்களெலாம்
ஒன்றி நிற்போம் என்று சொலி
என்னுட்டுக் கவிஞர் பலர்
இயற்றியதோர் பாமாலை
தன்னோடு நானுமுன்றன்
சன்னதியில் வணங்குகின்றேன்!



# ஏழையைக் கண்டால்...



ஏழையைக் கண்டால் மோழையும் பாயும்
என்றே சொன்னதும் பொய்யாச்சு!—அந்த
ஏழைய ரெல்லாம் தோழர்க ளாயுல
கெங்களுக் கென்பதும் மெய்யாச்சு! 1

வானை நம்பிப் பணத் தானை நம்பியுல
காள நினைத்ததும் பாழாச்சு!—தங்கள்
தோளை நம்பிக் குறிக் கோளை நம்பி மக்கள்
வாழ முனைந்திடும் நாளாச்சு! 2

பண்ணை வெளியிலே பொன்னை விளைத்தவன்
கண்ணைத் திறந்துமே பார்த்தாச்சு!—ஊரை
மண்ணை வளைத்தவன் எண்ணத்தி லே கர
மண்ணும் விழுந்திட நேர்ந்தாச்சு! 3

ஆலையி லே தொழிற் சாலையி லே தொழி
லாளர் கொடிகள் எழுந்தாச்சு!—அவர்
கூலியி லே சதி வேலைகள் செய்முத
லாளிகள் சூழ்ச்சி விழுந்தாச்சு! 4

பாதையைக் கண்ணால் பார்த்தாச்சு! மக்கள்
பட்டாளம் போலணி சேர்ந்தாச்சு!—இனிச்
சூதையும் வாதையும் மோதி நொறுக்கிடத்
தோள்கள் புடைத்தெழுந் தார்த்தாச்சு! 5

## பாரா உஷார்! 16

பாரா உஷார்! பாரா உஷார்!

பாரத புத்ரா! உஷார்! உஷார்!

பாரத நாட்டின் உள்ளும் புறமும்
பலப்பல முதலைகள் இருக்குது—அவை
வேருடன் நந்தம் விடுதலை வாழ்வை
விழுங்கிட வழிகள் பார்க்குது! (பாரா....

வெள்ளலை துள்ளும் கடற்கரை யோரம்
கள்ளக் கடத்தல் நடக்குது—அந்தக்
கொள்ளையர் நந்தம் பாரதத் தாய்க்கே
குழியைப் பறிக்கப் பார்க்குது! (பாரா....

சுருட்டல் பிழைப்பே தொழிலாய்க் கொண்ட
திருட்டுக் கும்பலும் இருக்குது—அது
இருட்டில் திரட்டிய பணத்தால் நம்மை
உருட்டி மிரட்டப் பார்க்குது! (பாரா....

அன்னியச் செலாவணி மோசடிக் கும்பல்
கன்னக் கோலுடன் திரியுது—அது
சின்னத் தனமாய் நாட்டின் சொத்தைத்
திருடிக் கொழுக்கப் பார்க்குது! (பாரா....

எல்லையி லேயொரு புல்லியர் கூட்டம்
சல்லியம் செய்யப் பார்க்குது—அந்தப்
புல்லியர் கூட்டம் சில்லரை விஷமத்
தொல்லைகள் கொடுத்தும் வருகுது! (பாரா....

அன்னிய நாட்டுக் கழுகுகள் நோட்டம்
இன்னமும் பார்த்து ஏங்குது—நாம்
கண்ணயர்ந் தாலொரு கணத்தினில் நம்மைக்
கவிழ்க்கக் கனவும் காணுது! (பாரா....



# நானல்லவோ?

# 17

இந்தக் கவிதைக்கு அடியெடுத்துக் கொடுத்தது மகாகவி இக்பாலின் கவிதை யொன்றின் கருத்தாகும். எனினும் இறை நம்பிக்கை கொண்ட இக்பாலின் கருத்துக்கு ஒரு திருப்பம் கொடுத்து, இறைவனையே கேள்விக் குறியாக்கி, மானுடத்தின் பெருமை பாடும் கவிதை இது.

*

மண்ணைப் படைத்தவன் நீ என்பதால்—உனை
வாழ்த்தி வணங்கெனப் பேசுகின்றார்!—அந்த
மண்ணில் அதிசயம் ஆயிரம் பண்ணிய
மானிடனைப் போற்றக் கூசுகின்றார்! 1

மண்ணைப் படைத்தவன் நீ எனினும்—உயர்
மாடம் சமைத்தவன் நானல்லவோ?
கண்ணைக் கொடுத்தவன் நீ எனினும்—திரைக்
காவியம் செய்தவன் நானல்லவோ? 2

ஆற்றைப் படைத்தவன் நீ எனினும்—அதில்
அணைகள் வகுத்தவன் நானல்லவோ?
காற்றைப் படைத்தவன் நீ எனினும்—வானக்
கப்பல் விடுத்தவன் நானல்லவோ? 3

பொன்னைப் படைத்தவன் நீ எனினும்—நகை
பூட்டத் தெரிந்தவன் நானல்லவோ?
மின்னைப் படைத்தவன் நீ எனினும்—அதைக்
வேலைக்கு வைத்தவன் நானல்லவோ? 4

காதைப் படைத்தவன் நீ எனினும்—இன்ப
கானம் இசைத்தவன் நானல்லவோ?
பாதம் படைத்தவன் நீ எனினும்—நல்ல
பரதம் பயின்றவன் நானல்லவோ? 5

பஞ்சைப் படைத்தவன் நீ எனினும்—ஆடை
பற்பல நெய்தவன் நானல்லவோ?
நஞ்சைப் படைத்தவன் நீ எனினும்—அதை
நன்மருந் தாக்குதல் நானல்லவோ? 6

இரவைப் படைத்தவன் நீ எனினும்—விளக்
கேற்றத் தெரிந்தவன் நானல்லவோ?
அரவைப் படைத்தவன் நீ எனினும்—அதை
ஆட்டிப் படைப்பவன் நானல்லவோ? 7

தீயைப் படைத்தவன் நீ எனினும்—அதைச்
சேவக னாக்குதல் நானல்லவோ?
வாயைப் படைத்தவன் நீ எனினும்—தமிழ்
வார்த்தை படைத்தவன் நானல்லவோ? 8

உன்னை வணங்கெனப் பேசுவதேன்?—இங்கு
என்னை மதித்திடக் கூசுவதேன்?
உன்னிலும் நானென்ன தாழ்ந்தவனோ?—சொன்னால்
உன்னைப் படைத்ததும் நானல்லவோ? 9



# காணாத மனிதனைக் கண்டேன்! 18

காலொன்றைக் காணாத மனிதனைக் கண்டேன்;
காலொன்றைக் காணாத கதையினைச் சொன்னான்:
"காலொன்றை யுத்த களத்தினில் சென்ற
காலத்தில் குண்டடிக் காயத்தில் தோற்றேன்!" 1

கையொன்றைக் காணாத மனிதனைக் கண்டேன்;
கையொன்றைக் காணாத கர்மத்தைச் சொன்னான்:
"கையொன்றைச் சண்டைக் காலத்தில் ஓர்நாள்
கண்மூடும் நேரத்தில் காணாமற் போனேன்!" 2

கண்ணொன்றைக் காணாத மனிதனைக் கண்டேன்;
கண்ணொன்றைக் காணாத காரணம் சொன்னான்:
"கண்ணொக்கும் நாட்டினைக் காத்திடும் போரில்
கண்ணொன்றை ஓர்நாள் காணிக்கை ஈந்தேன்!" 3

இதயமில் லாதவன் ஒருவனைக் கண்டேன்!
"இதயமில் லாததால் எனக்கென்ன நட்டம்?
இலட்சோப லட்சக் கணக்கினில் போரில்
இலாபத்தைப் பார்த்தவன் யானன்றோ!" என்றான்! 4

# எத்தனை எத்தனையோ? 19

இதயக் குகையில் தோன்றிடும் எண்ணம்
எத்தனை எத்தனையோ?—அதில்
உதயக் கதிரைக் காணு தொடுங்கி
ஓய்ந்தவை எத்தனையோ?

கதையில் கவியில் கற்பனை வடிவில்
கலந்தவை எத்தனையோ?—வெறுங்
கனவாய் முடியாக் கதையாய் நெஞ்சில்
கரைந்தவை எத்தனையோ?
விதையில் கருகி வெந்து தணிந்து
வீழ்ந்தவை எத்தனையோ?—ஒரு
வெறியில் மீண்டும் புத்துயிர் பெற்று
வென்றவை எத்தனையோ? (இதயக்—

மனத்தி லிருந்தும் வாய்க்கு வராது
மாய்ந்தவை எத்தனையோ?—சொலும்
வார்த்தையி லடங்காப் பொருளாய் உணர்வில்
வாழ்ந்தவை எத்தனையோ?
நினைத்தது ஒன்றாய் நிகழ்ந்தது வேறாய்
நேர்ந்தவை எத்தனையோ?—கானல்
நீரினை நாடி மானென ஓடி
நின்றவை எத்தனையோ? (இதயக்—

உண்மையைத் தேடும் வேட்கையில் நெஞ்சில்
　　உதித்தவை எத்தனையோ?—பொய்
உரைகளை நம்பிக் கரையினைக் காணு
　　துழன்றவை எத்தனையோ?
விண்முக டணையும் கற்பனை வேள்வி
　　வேட்டவை எத்தனையோ?—அதில்
வென்றவை நடுவில் நின்றவை வறுமை
　　கொன்றவை எத்தனையோ? (இதயக்

எண்ணரும் எண்ணம் தோன்றிய வண்ணம்
　　இருப்பதென் இதயமடா!—ஏதும்
எண்ணு திருந்தால் என்னரும் வாழ்க்கை
　　மண்ணுய்ச் சிதையுமடா!
எண்ணம் தெளிந்து எழுத்தினில் வந்தால்
　　இலக்கிய விந்தையடா!—என்
எழுத்தினில் வாரா இலக்கிய மெல்லாம்
　　எனக்கே சொந்தமடா! (இதய



இனிய கவிதை எழிற்கவிதை
	இதயம் கவரும் கவிதையெனக்
கனியக் கனியப் பாராட்டிக்
	களிக்கும் ரசிக! நீ போற்றும்
இனிய கவியும் எழிற்கவியும்
	இதயம் கவரும் நற்கவியும்
கனியும், பிறவிப் பேறெய்தும்
	கதையை நீதான் அறிவாயோ? 1

வருதுயர் அறியா தலைமீது
	வாயைப் பிளந்து வந்தலையும்
ஒருசிறு சிப்பிப் புழுப்பிறவி
	உடலில், விண்ணின் மழைத்தாரைச்
சிறுதுளி பட்டுத் தெறித்துவிழச்
	சிப்பிப் புழுவின் சீவனுக்கே
உறுதுயர் என்றே ஒருநாளில்
	உலகோர் மெச்சும் முத்தாகும். 2

கொண்டவன் தன்னோ டுறவாடும்
	கூட்டுக் களியின் முயக்கத்தில்
பண்டியிற் புகுந்த பனித்துளியின்
	பாதியும் பருத்துத் திரண்டொருநாள்
முண்டி யடித்து வெளியேற
	முனையும் கொடிய வேதனையும்
கண்டோர் போற்றும் சீராட்டும்
	கவினோ டுயிர்க்கும் சிசுவாகும். 3

நீரும் காற்றும் ஒளியுமிலா
    நிலத்தின் உந்திப் பிலந்தன்னில்
பாரின் சுமையை முதுகேற்றிப்
    பற்பல பற்பலப் பல்லாண்டாய்
ஆரும் அறியாக் கடுந்தவத்தில்
    அழுந்திக் கிடக்கும் கரித்துண்டு
நீறிக் குமைந்து கனிந்தொருநாள்
    நெஞ்சம் கவரும் மணியாகும். 4

துன்பக் கறையின் வேதனையில்
    தொடங்கும் தொலையாத் துயர்தானும்
பின்பொரு நாளில் முடிவெய்திப்
    பெறுமோர் கவிதை ஒரு முத்து!
இன்பில் தொடங்கி இதயத்துள்
    என்றோ புகுந்த ஓரெண்ணம்
பின்பொரு துயருக் காளாகிப்
    பிறக்கும் கவிதை ஒரு குழவி! 5

முன்பும் பின்பும் இல்லாது
    முதலும் இடையும் கடையாவும்
துன்பே சுமந்து தவம்நோற்றுத்
    தோற்றும் கவிதை மாணிக்கம்!
முன்போ பின்போ இடைநிலையோ,
    மூன்றும் கலந்த முழுநிலையோ,
துன்பே இன்பின் தொடக்கநிலை!
    துயரம் இன்றேல் கவிதையிலை! 6

1

நிலவடித்தால், குளிரருவி
நீர் பொழிந்தால், அருவியினில்
குலவி நகை முத்தாடிக்
குளிக்கின்ற மங்கையர்தம்
கலை நெகிழ்ந்தால்,
கச்சிறுக்கைப் பிச்செறிந்த
முலை தெரிந்தால், அகஸ்மாத்தாய்
முழு முகத்தில் குறுமுறுவல்
முளைத்தும் விட்டால், —
ஆங்கே
கலைவாணி ரெடிமேடாய்க்
கவியருள்வாள். நெஞ்சில்
மலைபோலே சிந்தனைகள்
மண்டியெழ மண்டியெழக்
கலவியிலே கருத்தூற,
கருவூரை நாடியுளம்
பொல பொலெனக் கவியருளப்
பொங்கும் காதல்! ஆசை
அலைபாய்ந்து வழிந்தோட
அகத்துறையில், களவியலில்

கலைவிலக்கம் கண்டங்குக்
கலை விளக்குக் காணும்
புலவனை நாம் காண்போம்!
புண்ணியராம் ரசிகர்குழாம்
விலையரிதாம் கவி வேட்ட
விரதம் வெல்லும்!

2

வீட்டுரிமைக் காரன்
வீதிக் கதவிழுத்துப்
பூட்டிடவே துணிந்தால்,
பொண்டாட்டி தாலியினை
நோட்டெழுதி வாங்கியவன்
நோட்டீசு விட்டுவிட்டால்,
பாட்டினுக்கு வரும் பரிசில்
பலி விழுந்தால், வருவாயின்
ரேட்டு நிதம் கம்மி வந்தால்,
ரேழியிலே தொட்டிலினை
ஆட்டுகின்ற பேதைக்கு
அஞ்சாறு மாசமதாய்த்
தீட்டு நின்றால், கருக்குழியில்
சிசு நேர்ந்தால், அடுப்பு
மூட்டுதற்கு வக்கின்றி
மூலையிலே குமுறலுடன்
போட்டியிட்டால், 'ராப்பிச்சை
போடம்மா' என்றொருத்தன்
கேட்டுவிட்டால், உயிர்வாழக்
கெதியற்று விழுந்த சவம்
வீட்டருகே நாற்றமெழ
வீதியிலே நாதியற்றுப்
போட்டிருக்கக் கண்டால்—,
'உலகைப்
பொடியாக்கு!' என்றலறும்

பாட்டு வரும்! மழை காணப்
பயிர்போலே உயிர்க்கவிதை
வேட்டிருந்த ரசிகர்குழாம்
விரதம் வெல்லும்!

3

பார்க்கின்ற இடமெல்லாம்
பகை சேர்ந்தால், நெஞ்சம்
வேர்க்கின்ற பயத்தாலே
வெலவெலத்தால், வாழ்க்கை
நீர்க்குமிழி ஆமென்னும்
நினைப்பு வந்தால், கண்ணீர்
வார்க்கின்ற கதி வந்தால்,
வாதையுற்றால்—
உருக்கு
வார்த்தைகளில் பாட்டு வரும்;
வாய்வீச்சில் பயம் பதுங்கும்!
சீர்த்தமிழர் கவிவேண்டிச்
செய்து வந்த தவமெல்லாம்
தீர்த்து விடும்! ஆங்காரத்
தீ பறக்கும் கவிதை கண்டு
ஆர்த்தெழுவார் ரசிகர்குழாம்!
அதிருஷ்டம் வெல்லும்!

4

நிதி சேர்ந்தால், தரித்திரத்தின்
நிலை குலைந்து, தலையெழுத்தின்
விதி மாறி வருவாயில்
வீக்கம் கண்டால், பையில்
புதிதாகக் காசு பணம்
பொல பொலத்தால், நெஞ்சில்

குதி போடும் திமிருள்ளே
குறுகுறுத்தால், காமப்
புதிர் போடும் விந்தினுக்குப்
போக்குப் பார்த்தால், கோயில்
சதிராடும் தாசி மகள்
சாடை செய்தால், மேனி
மிதமிஞ்சிப் போகத்தில்
மீறிப் போனால், தாதுச்
சுதி விழுந்து, நாடியெலாம்
சோர்ந்து சாய்ந்தால்,
விதம் விதமாய் அரையாப்பு
வெள்ளை வந்தால், இந்திர
கதி நேர்ந்தால், திருமேனி
கண்களானல், —

இன்பம்

சதமற்ற வாழ்க்கையிலே
சலிப்புத் தட்டும்! பரம
பதம் தேடும் வேதாந்தப்
பாடல் கிட்டும்! மாய
மதம் விழையும் ரசிகர் குழாம்
மலியக் காண்பார்! அர்த்தம்
விதம் விதமாய்க் காணுமவர்
விரதம் வெல்லும்!



# சோதனைக் கவிதை! 22

இன்றைய 'புதுக் கவிதை'க்கு முன்னோடியாக ஐம்பதாம் ஆண்டுகளின்போது சிலர் 'சோதனைக் கவிதை' என்ற பெயரில் செய்து வந்த முயற்சிகளைக் கண்டு பாரதியின் 'ஊழிக்கூத்து' பாடலின் சந்தத்தில் பாடிய நையாண்டிக் கவிதை இது.

கெடு பிடி செய்து
பொடிபல செய்யும் பல்லை!—உள்ளக்
கிளர்ச்சி வடிக்க
இலக்கண மேபெருந் தொல்லை!—பாட்டின்
அடிபடு மெதுகை
அடிபடு மோனையிற் சாடக்—கூத்
தாடுங் கவிதைத்
தாயே! நீயோர் தொல்லை!
தொல்லை! தொல்லை!—உன்னைத்
தொடுவது மினிமேல்
தானும் இல்லை! இல்லை! 1

விக்கும் பொருளைக்
    கக்கத் திணறி நையோம்! — அந்த
வேதனை தீரச்
    சோதனைக் கவியே செய்வோம்! — தமிழ்
பொக்கும் பொடியும்
    மக்கும் மடிந்தே போகும் — என்ற
போதும் கவிதைத்
    தாயே! நீயோர் பூதம்!
பூதம்! பூதம்! — எங்கள்
    புதுமைக் கவியே
இனிமேல் எங்கள் வேதம்! வேதம்! 2



மகாகவி தாகூரின் கவிதைக்
கருத்தை அடிச் சரடாகக் கொண்டு
இயற்றப்பட்ட கவிதை இது.

தங்க வளைமலர்ந்த செங்கரக் கொடி—அசைந்
தாடித் துவள ஒளி கூடியிலகும்
திங்க ளிளமுகத்தில் மூர லரும்ப—சுடர்ச்
சோதி தெறிக்கும் கண்கள் பாதி மலர,
துங்க வளமை மிஞ்சும் அங்க அசைவில்—விண்ணில்
துள்ளித் திமிர்ந்தொசியும் மின்னல் ஒளிர,
மங்கைப் பருவமெங்கும் பொங்கி வழிய—வரும்
வாலைக் குமரியே! நீ சொல்லுவதைக் கேள்! 1

சில்லுக் குரலையுன்றன் சிந்து நகையை—எம்
சிந்தை கவருமுன்றன் சந்த மொழியைச்
சொல்லைக் குழைத்துணர்வை விள்ளும் இசையால்—மனம்
சொக்கும் கவிதையினில் உன்னை இசைத்தோம்!
வல்லிக் கொடியிடையை, பிஞ்சு விரலை—உயிர்
வாஞ்சை கொளத் துடிக்கும் அங்க ஒயிலைக்
கல்லைப் பிசைந்துகலை யுள்ள விரிவால்—உளம்
கவ்வும் சிலையினிலே உன்னை வடித்தோம்! 2

கற்றை நிலவெரிக்கும் முத்து மணியும்—உன்
கண்ட மணைந்து மனம் விம்மி நெகிழும்;
முற்றிச் சிவந்த நறும் வெற்றிலை மது—உன்
மோகனப் புன்னகைக்கோர் வேகம் அருளும்;
சுற்றிப் பவனிவரும் தென்றல் அலையில்—விரி
சோலை மலர்களுன்றன் கூந்தல் அமரும்;
பற்றிப் படரும் பட்டுப் பூச்சிகளெல்லாம்—உன்
பச்சை உடம்பினுக்கோர் கச்சை வழங்கும்! 3

முன்னைப் பழம்பொருளின் சொன்ன மனசில்—அலை
மோதி யமர்ந்தபரஞ் சோதி வெளியில்
ஊன்னி யெழுந்ததுன்றன் கன்னி யுருவம்—எழில்
ஊட்டமுறப் பெற்றதெங்கள் தேட்ட மனசில்!
மின்னிச் சுழலுமெழிற் கன்னி மகளே!—காதல்
மிஞ்சிச் சுழலவுனை நெஞ்ச மணைந்தோம்!
பின்னிப் பிணைக்கும்கலை வண்ண மதனை—உண்ட
பித்து வெறியினிலே சித்தம் மறந்தோம்! 4



# ஆசை பலியாச்சோ? 24

1

பாலியத்துச் சூதறியாப்
பருவம் கழிந்தென்னுள்
வாலிபத்துப் புத்துணர்ச்சி
வலை வீச, பிஞ்சிளமை
நெஞ்சத்துச் சூனியமென்
நிறையழிக்க, வாழ்வதனை
நஞ்செனவே நான்தினமும்
நச்சி வரும் நாளையிலே,
ஆவி நிமிர வரும்
அமுதத்தை காணமல்
சாவுக் குரலடுத்துச்
சஞ்சரிக்கும் வேளையிலே,
என்றைக்கோ, எப்போதோ,
எனக்கே நினைவில்லா
அன்றைக்கு—
குன்றெரிந்த வேலவர்தம்
கோபுரத்துக் குடவாசல்
முன்றிலிலே நின்றிருந்தேன்...

2

அந்நேரம்—
மாலை யிளந் தென்றல்
மந்த நடை பயின்றும்
நீலவண்டு வானலையில்
நிலையற்று நீந்திவந்தும்
கோல இதழ்விரியா,
கூட்டுக் களியுணரா,
சூலறியா, காமச்
சுவையறியா வெண்முகையாய்—
வெட்டி எடுத்த எழில்
மேனி நலத்தோடு
பட்டை பிடித்தறியாப்
பருவயிர மணியினமாய்—
ஆலைவாய்ப் பற்களிலே
அறைபடாச் செங்கரும்பாய்—
மெது மணலின் திரைநீக்கி
மெல்ல முகங் காட்டும்
புது முளையாய்—
மெல்ல நடை பழகி
மெட்டி குலுங்கலுங்கும்
செல்லச் சிறுநடைக்குச்
செகத்தை விலை பேசி,
படமெடுத்துப் படமிறக்கும்
பாம்பைப் போல், நின்பாதத்
தடமெடுத்து, தடமளந்து
தலைகவிழ்ந்து, ஆலயத்து
வாசலிலே நீ வந்தாய்!
வந்தவளைக் கண்டவுடன்
ஊசலிடும் நெஞ்செல்லாம்
உவகைப் பெருக்கூறப்
பாசவலைக் கண்ணியிலே
பட்டு விட்டேன்!

3

அன்று முதல்—
வாசப் பனிமலரில்,
வட்டநிலாத் தேனமுதில்,
வீசி விழும் வெள்ளருவி
விந்தைக் கலகலப்பில்,
வானக் குளத்தோடும்
மீனக் குலத்துடிப்பில்,
நோக்கும் இடமெல்லாம்
நின்னுருவின் பொன்னெழிலே
பூக்கும்; ஒளிசிதறும்;
புன்னகைக்கும்! தூக்கத்துச்
சொப்பனத்தில் நின்னுருவம்
சொகுசுக் கதை பேசி
அற்ப சுகம் காட்டி
அலைக்கழிக்கும்! பாவலர்கள்
செஞ்சொற் கவியமுதால்
செய்த கவிதையெலாம்
நெஞ்சைக் குளிர்வித்து
நினைவைக் கலையாக்கும்!
உன்னுடைய—
கன்னக் குழிச்சுழிப்பில்
காவியங்கள் கற்றறிந்தும்,
மின்னல் விழி வீச்சில்
மேதினியைத் தானளந்தும்,
நலம் புனைந்த மேனியெழில்
நளினத்தில், நின்பாதச்
சிலம்பலம்பும் பண்ணொளியில்
சீர்ப்பரதம் கற்றறிந்தும்,
பாசப் பயிர் வளர்த்தேன்!
பகற் கனவுச் சோபனத்தில்
நேசம் வளர்த்துன்னை
நெஞ்சிற் கலந்துவந்தேன்!

என்றாலும்—
தூரத்தே இருந்தவனைத்
தொட்டறிய, நின்னுடலை,
ஆரத் தழுவி, மனத்
தாசைக் கனல் தணிக்க
நேரத்தை எதிர் நோக்கி
நெடுநாள் தவமிருந்தேன்.

4

காத்திருந்த என்னுடைக்
கனவும் நனவாச்சு!
இன்றைக்கு—
அம்மி மிதித்தேறி,
அருந்ததியைக் கண்ணேக்கி,
செம்மை அறம்துலக்க,
திருவளர்க்க, குலம்விளக்கச்
சம்மதித்தாய்! என்றனுக்கே
சதியானய்!
இன்றிரவு இவ்வறையில்—
நீலவொளிக் காந்தம்
நின்றெரிய, மஞ்சத்தில்
பாலலைபோல் பஞ்சணையும்
பம்மென்று பொம்மியெழ,
சீத இளந்தென்றல்
சிலுசிலுக்க, பூமணத்தின்
போதை கிறுகிறுக்க,
போகக் கனவெழும்ப,
மாங்கனிகள், சுளைவருக்கை,
மகிழ்சாந்தம், தாம்பூலம்
ஆங்கொருபால் நின்வரவை
ஆவலுடன் எதிர்நோக்க
நானும் உடனிருந்தேன்.

5

அவ்வேளை:
சாகா வரமருளும்
சஞ்சீவி ஏந்திவந்த
மோகினிபோல் வாயிலெனும்
மோட்சவழி நீவந்தாய்!
வந்தவளை வரவேற்க
வாய்துடிக்க, வாயடைக்க,
சிந்தைப் பேருவகை
சிந்த, நாணமெனைக்
கொந்தி வதைசெய்யக்
குரலெடுத்தேன்; ஏதேதோ
குழறினேன்.
உள்ளம் படபடக்க,
உடம்பெல்லாம் இன்பஜுர
வெள்ளம் பெருக்கெடுத்து
விம்முற்று மேலோங்க,
மெய்வளையத் திட்டமிட்டு
மெல்ல உனை அருகி,
கைவளையில் விளையாடி,
கண்ணலையில் திளைத்தாடித்
தாஜாக்கள் செய்துன்னைத்
தழுவினேன்; மலர்ந்தொளிரும்
ரோஜாப்பூக் கன்னத்தை
ருசித்தேன்; முத்தமிட்டேன்.
தோளை மெலவருடி,
தோளணியை மெல விலக்கி,
தாளை மெல வருடி,
தாடனங்கள் பல விளைத்து,
கூந்தல் கதிர் கோதி,
கோல நுதல் நீவி,

ஏந்து தனத்திரண்டும்
எதிர்க்கட்சி தானடி
ஆகம் தழுவ, நம
தகம்தழுவ, அனுராகப்
போகத்துப் பாதையிலே
புகுந்தேன்; நிலை மறந்தேன்,

6

இச்சை வெறிமீற
என்னை, உனை மறந்தேன்;
பச்சைக் கறி விரும்பும்
பசிப்புலிபோல் என்னுள்ளே
மிச்சம் இருந்ததெலாம்
மிருகச் சதைப்பசிதான்;
பிச்சைச் சிறு போகம்
பெற்றேன்! ....
உள்ளக் கொதிப்படங்க,
உடற்கனலும் பூத்தடங்கத்
தள்ளிப் படுத்தேன்; நான்
தனியானேன்! அக்கணமே
கொள்ளை கொடு போயிற்றே
கொஞ்சும் இளங்காதல்!
ஐயையோ! என்னுளத்தின்
அருமைத் திருக்காதல்
குய்யத்துக் கோணத்தில்
கொலையுண்டு போச்சுதடி!

7

அன்றைக்கோ—
தொட்டுணரா மென்முகைபோல்,
தூரத்து லட்சியம்போல்,

நெட்டைக் கனவேபோல்
நீயிருந்தாய்.
தில்லைவெளி யானாலும்
திரைக்குப் பின் பார்ப்பதிலே
எல்லையற்ற பேராவல்
எழும்பும் கதையே போல்,
எட்டாப் பழம்தின்ன,
இறக்காத தேனிறக்க,
கிட்டாத தூரத்துக்
கிரகத்தின் ஒளிகாண
மட்டற்ற பேரார்வம்
வளரும் விதமே போல்,
உன்னை என் லட்சியமாய்,
உள்ளத்து நாயகியாய்,
கன்னி யெழிலுன்னைக்
காதலித்தேன்.
இன்றைக்கோ—
வற்றுப் பெருங்கனவாய்
வளர்ந்துவந்த ஆசையெலாம்
சிற்றின்ப சித்தியிலே
செத்துக் கருகியதேன்?

8

மண இரவே காதலுக்கு
மறலியோ? ஆசை
பிணமாவதும் குய்யப்
பிலப்பா தலந்தானோ?
சித்திக்கும் இன்பத்தில்
சிறப்பில்லையோ? சிக்காது
எத்தித் திரிந்தலைந்து
ஏச்சங்கள் காட்டுகின்ற

கைதொடாக் காதலில்தான்
கற்கண்டுச் சுவையுண்டோ?
தூரத்தே வைத்துன்னைத்
தொழுவதில்தான் சுகமுண்டோ?
ஆரத் தழுவிவிட்டால்
ஆசை பலியாமோ?
ஆரணங்கே! நீ வளர்த்த
ஆசை பலியாச்சோ?



# ஒற்றையடிப் பாதை 25

மொட்டைப் பனைமரங்கள் மோனத் தவமியற்றும்
வெட்ட வெளி வெம்பரப்பு; வெம்பரப்பின் எல்லையிலோ
தொட்டுத் தழுவிநிற்கும் தொடுவானம்; தொலைவெல்லாம்
சுட்டுப் பொசுக்குமொரு சுடுகாடே! இத்தகைய
பொட்டல் களர்நிலத்துப் புழுதி மணலூடே
ஒட்டைச்சா ணகலத்தில் ஒற்றையடிச் சிறுபாதை. 1

பாதையதை நான்நோக்கிப் பகர்ந்தேன் ஒருகேள்வி:
"பேதாய்! இப் பாலைவெளிப் பேய்த்தேரின் வெம்மையிலே
ஆதாரம் ஏதுமின்றி அலைக்கழிந்து நீகிடத்தல்
வேதனையோ? விதிவசமோ? வெய்யபழ வினைப்பயனோ?
ஏதாம்உன் தவக்கோலம்?" என்றிட்டேன். என்றவுடன்
பாதையது வாய்திறந்து பணிவோடு பேசிற்று: 2

"வெஞ்சுரந்தான்! என்றாலும், விடாய்தணிக்க நீர்தேடி
வஞ்சியர்கள் குடமெடுத்து வாவித் தடம்நாடி
மஞ்சள் வெயில்மயங்க வருஞ்சமயம் அன்னவர்தம்
கஞ்சமலர்ச் சேவடியைக் கையேந்திக் கண்ணொற்றி
நெஞ்சம் நெகிழ்ந்தெனது நினைவு மறந்திருக்கும்
கொஞ்சப் பொழுதுக்காய்க் கோடியுகம் காத்திருப்பேன்!" 3

## பேச்செதற்கு? 26

1

பேச்செதற்கு? நம்மிடையே
பேச்செதற்கு?
பேச்சில் வாய்வீச்சில்
பிரசங்க தோரணையில்
மூச்சைத் தொலைத்தே நாம்
முயன்றாலும்,
நம்மிதயச்
சூட்சத்தைத் தொட்டறிந்து
சுகமறியா அந்நாளில்
பேசத் துடிதுடித்தோம்;
பேசினோம்; பேசிநின்றோம்!

2

கிட்டத்தே நீயிருந்தும்
கிறுகிறுத்துப் போயிருந்தும்,
தொட்டுப் பழகுதற்குத்
தூரம் குறைந்திருந்தும்,
ஒட்டும் உறவுகொளும்
உரிமை கிடைத்திருந்தும்,
கட்டாயச் சூழ்நிலையில்
கட்டுண்ட நம்மிடையே

எட்டாத்தொலையுணர்ந்து
இடைவெளியைத் தானறிந்து
தட்டழிந்து தடுமாறித்
தவித்திட்ட அந்நாளில்,
கட்டிக் கரும்பென்றும்
கண்ணென்றும் பொன்னென்றும்,
மட்டிப் பழமென்றும்
மலரென்றும் தேனென்றும்,
வெட்டிச் சிறுபேச்சும்
வெறும்பேச்சும் வீண்பேச்சும்
பேசத் துடிதுடித்தோம்;
பேசினேம்; பேசிநின்றேம்!
உள்ளத் துணர்வுகளை
உணர்வின் அசைவுகளை
விள்ளும் வலிமையிலா
வீணன வார்த்தைகளைப்
பிள்ளைப் பசுங்கிளிபோல்
பேசினேம்; பேசிநின்றேம்!

3

அத்தினத்தில் நாம்புகன்ற
அர்த்தமிலாச் சொற்சிலம்ப
வித்தைகளும், அணிந்துரையாய்
விளம்பியபல் புனைந்துரையும்
இத்தினமும் நமக்கெதற்கு?
இனிமேலும் அவையெதற்கு?
அல்லாடும் நம்மிதயத்
தந்தரங்கம் அறியாமல்
சொல்லாடி நாம் சலித்துத்
தோற்ருலும்,

உன்னுடைய

பொல்லாக் கருவிழியின்
புத்தொளியும் புன்னகையும்
கல்லாப் பொருள்பலவும்
கற்பித்து, சொல்லுக்குள்
நில்லாப் பொருளனைத்தும்
நெஞ்சுள் இனம்காட்டி
எல்லாம் எனக்குணர்த்தி
இதயத்தைக் கூட்டியபின்
பேச்செதற்கு? நம்மிடையே
பேச்செதற்கு?

4

ஆசை மனமறிந்து
அருகில் நெருங்கிய பின்,
பேசும் இதழ்நான்கும்
பேச்சிழந்து பிணைந்திறுகிப்
பூசிப் பொருந்திய பின்,
பூட்டிட்டு மூடிய பின்
பேச்செதற்கு? நம்மிடையே
பேச்செதற்கு?
மாலான நம்மிருவர்
மானிடமும் மனங்கலந்து
பாலொடுநீர் சேர்ந்ததெனப்
பரவசத்தை எய்திடுங்கால்,
காலமொடு தூரமெலாம்
கணக்கிறக்கும் கணப்பொழுதில்
தூலமொடு சூக்குமமும்
துரியநிலை பெற்றிடுங்கால்,
சத்தின்றிச் சித்துமிலாச்
சடமின்றிச் சீவனிலாத்
தத்துவத்தின் மெய்ப்பொருளைத்
தாமே நாம் உணருங்கால்,

அத்துவித மாய்த்தோற்றும்
ஆனந்த சாகரத்தே
முத்துக் குளித்தடைந்த
மோன லயசுகத்தில்
சித்தம் களித்துவக்கும்
சித்துவித்தை கற்றபின்னால்,
வித்தாரப் பேச்சும்
வெறும்பேச்சும் நமக்கெதற்கு?

5

பொன்னைக் குகையிட்டுப்
புடமிட்ட வாறதுபோல்
உன்னுளமும் என்னுளமும்
உருகிக் கலந்த பின்னர்,
தன்னையே நாமிழந்து
தாமாகி விட்டபின்னர்,
என்னென்றும் உன்னென்றும்
ஏதுமிலா தானபின்னர்,
உன்னில் எனைக் கரைத்து
ஒன்றுமிலே னாகிவிட்ட
பின்னர் நமக்குள்ளே
பேச்செதற்கு?
பேசடி நீ!
பின்னர் நமக்குள்ளே
பேச்செதற்கு?



# ஆறுதனைக் காதலித்தேன்... 27

ஆறுதனைக் காதலித்தேன்; ஆறுதனைக் காதலித்தேன்;
ஆறு பெருகிவரும் அழகுதனைக் காதலித்தேன்!
ஆறு பெருகிவரும் அழகுக்கோ காதலித்தேன்?
ஏறும் படிவரிசை இருந்ததனால் காதலித்தேன்!
ஏறும் படிவரிசை இருந்ததற்கோ காதலித்தேன்?
ஏறும் படியிலெழும் இன்னிசைக்காய்க் காதலித்தேன்!
ஏறும் படியிலெழும் இன்னிசைக்கோ காதலித்தேன்?
இன்னிசையும் பெண்ணிசையாய் இருந்ததனால் காதலித்தேன்!
இன்னிசையும் பெண்ணிசையாய் இருந்ததற்கோ காதலித்தேன்?
பெண்ணவளும் கன்னியெனப் பெற்றதனால் காதலித்தேன்!
பெண்ணவளும் கன்னியெனப் பெற்றதற்கோ காதலித்தேன்?
கன்னியவள் பாடியதோர் கவிதைக்காய்க் காதலித்தேன்!
கன்னியவள் பாடியதோர் கவிதைக்கோ காதலித்தேன்?
கவிதையிலே தோய்ந்திருந்த கவலைக்காய்க் காதலித்தேன்!
கவிதையிலே தோய்ந்திருந்த கவலைக்கோ காதலித்தேன்?
கவலையிலும் நற்காதல் கனிந்திருக்கக் காதலித்தேன்!
கவலையிலும் நற்காதல் கனிந்ததற்கோ காதலித்தேன்?
காதலிலும் காதலன்பேர் கலந்தொலிக்கக் காதலித்தேன்!
காதலிலும் காதலன்பேர் கலந்ததற்கோ காதலித்தேன்?
பேரதுவும் எனைக்கவர்ந்த பெற்றிக்காய்க் காதலித்தேன்!
பேரதுவும் எனைக்கவர்ந்த பெற்றிக்கோ காதலித்தேன்?
பேரதுவும் என்பேராய்ப் பெற்றதனால் காதலித்தேன்!

## நெஞ்சக் கனல் 28

கவிதைச் சுவையாய் மாருதோ?—நெஞ்சக்
கனலும் சற்றே ஆருதோ?

கூடும் புருவச் சிலைவளைவும்—விழிக்
கோணம் பொழியும் நிலவமுதும்
ஆடும் இருகண் மெல்லசைவும்—அவை
ஆசைக் கதைகள் பேசியதும்.... (கவிதைச்

கண்ணும் கண்ணும் கலந்துறவாய்—இன்பம்
காணும் மோன லயசுகத்தில்
எண்ணம் யாவும் நீயாகி—என்
இதயம் நிரம்பித் ததும்பியதும்... (கவிதைச்

நெஞ்ச மிரண்டும் உறவாட—நம்
நினைவுகள் தேய்ந்து தடுமாடக்
கொஞ்சிக் கொஞ்சி மொழி குழற—நீ
குலவித் தருமோர் இன்னமுதும்.... (கவிதைச்

வெடிக்கும் முல்லை மலர்சூடி—மண
வெறியில் குழையும் கருங்குழலும்
துடிக்கும் இதழின் புன்னகையும்— அதில்
தோயும் ஈரத் தேன்சுவையும்.... (கவிதைச்

மெல்லத் தடவிப் பரிமாறும்—என்
மேனி சிலிர்க்கப் பரவசமாய்ச்
சில்லென் றுணர்ச்சி குளிர்ந்தோட—இணை
சேரத் தழுவும் பொற்கரமும்.... (கவிதைச்

ஆரத் தழுவும் முயக்கத்தில்—நம
தாவி கலக்கும் மயக்கத்தில்
நேரம் தூரம் என்பதெலாம்—தம்
நிலைகெட் டழியும் ஒருகணமும்.... (கவிதைச்

# மீட்டும் ஒருமுறை நீ... 29

மீட்டும் ஒருமுறை நீ
வா ரா யோ?—அந்தப்
பாட்டை மறுமுறை யும்
பா டா யோ?—நெஞ்சை

வாட்டும் தனிமையிருள் மூட்டம் கலைத்திதய
நாட்டம் தனக்கொளியைக் காட்டும் அமுதமயக்
கீதம் தனைத் திரும்பக்
கே ளே னோ?—மீண்டும்
பாதை முனையி லுனைப்
பா ரே னோ?—உன்றன்

பாதந் தனிலணிந்த நாதச் சிலம்பணிகள்
தா-தை எனப்புலம்பித் தூதுப் பதம்விளம்ப
வன்னத் திருமயி லாய்
வா ரா யோ?—வந்தே
இன்னம் ஒருமுறை நீ
ஏ கா யோ?—உன்றன்

மின்னற் கொடியிடையில் சின்னக் குடமணைத்து
அன்ன நடைநடந்து தன்னந் தனியளாய்நீ

ஆற்றங் கரைக்கு வர
லா கா தோ?—சற்றே
வீற்றுத் தனித் திருக்க
வேண் டா யோ?—மாலைக்

கீற்றுக் கதிரொளியின் சாற்றைப் பிழிந்தெடுத்துத்
தீற்றிச் சமைத்ததெனத் தோற்றும் எழில்முகத்தில்
தென்றல் சிலு சிலுத்துத்
தீண் டா தோ?—கன்னம்
கன்றிச் சிவந் தொளிர்ந்து
கா ணா தோ?—அந்தத்

தென்றல் தருஞ்சுகத்தில் ஒன்றி மனம்முயங்கி
நின்று மயங்குகின்ற உன்றன் பரவசத்தில்
உள்ளந் தனில் உவகை
ஓங் கா தோ?—இன்ப
வெள்ளம் பெருக் கெடுத்து
வீங் கா தோ?—அந்த

வெள்ளப் பெருக்கிடையே கள்ளத் தனமாயெனை
மெள்ளக் கடைக்கணிட்டென் உள்ளங் கவருமுன்றன்
நாவில் மதுர இசை
நா டா தோ?—நெஞ்சின்
ஆவல் அதில் தொனிக்க
லா கா தோ?—என்னுள்

தாவிக் கொடிபடர்ந்து ஆவிதனைப் பிணித்துத்
தேவ நிலையெனக்குப் பாவித் தருளுமந்தப்
பாட்டை மறுமுறை யும்
பா டா யோ?—பாட
மீட்டும் ஒருமுறை நீ
வா ரா யோ?........



## உனக்கும் எனக்கும்... 30

உனக்கும் எனக்கும் இது தெரியும்—இதை
உணரா தார்க்கு எது புரியும்?

ஒளியைத் தேடும் விழி போலே—எழில்
உலகைத் தேடும் கவி போலே
துளியைத் தேடும் பயிர் போலே — உயிர்த்
துணையைத் தேடி நாமிருந் தோம். 1

வார்த்தையின் துணையை நாட வில்லை;—நாம்
வாய்திறந் தொருசொல் பேச வில்லை;
பார்த்தோம்! பார்த்த பரவசத்தில்—நம்
பரம்பரை உறவைப் புரிந்து கொண்டோம். 2

கண்ணும் கண்ணும் கலந்திருந்தோம்;—அதில்
காணும் பொருளைக் கண்டிருந் தோம்;
எண்ணம் எல்லாம் தேனாகி—நாம்
இதயம் மாறிப் புகுந்திருந் தோம். 3

கடலிற் கலந்த நதி போலே—இளங்
காற்றில் கலந்த சுகம் போலே
உடலிற் கலந்த உயிர் போலே—நாம்
ஒருவரில் ஒருவர் உறைந்திருந்தோம். 4

தன்னை யிழந்தோம்; தாமானோம்—வையத்
தத்துவப் பொருளே நாமானோம்;
முன்னை யறியாப் புதுமையில் ஜீவன்
முக்தி நிலையில் முகிழ்த்திருந் தோம். 5

## நினைத்து நினைத்து... 31

நினைத்து நினைத்து எனது உள்ளம் உருகுது—நெஞ்சை
நனைத்து நனைத்துத் துயர வெள்ளம் பெருகுது—நாம்

தனித்துத் தனித்து நினைத்து நினைத்து இருந்ததும்—பின்னர்
தயங்கித் தயங்கி இருவர் மனமும் புரிந்ததும்—நெஞ்சம்
இனித்து இனித்துப் புதிய இன்பம் பிறந்ததும்—அதில்
இணைந்து இணைந்து உலகம் யாவும் மறந்ததும்—இன்றும்

நினைத்து நினைத்து எனது உள்ளம் உருகுது—நெஞ்சை
நனைத்து நனைத்துத் துயர வெள்ளம் பெருது—நீ

பதித்துப் பதித்துப் பார்த்த நிலையை மறப்பதோ?—உனைப்
பார்த்துப் பார்த்து மகிழ்ந்த நினைவைத் துறப்பதோ?—நித்தம்
துதித்துத் துதித்துத் தொழுத சிலையை உடைப்பதோ?
—நெஞ்சைத்
துளைத்துத் துளைத்துப் புகுந்த அன்பைத் துடைப்பதோ?
—இதை

நினைத்து நினைத்து எனது உள்ளம் உருகுது—நெஞ்சை
நனைத்து நனைத்துத் துயர வெள்ளம் பெருகுது—நீ

சிலிர்த்துச் சிலிர்த்து மகிழ்ந்ததும் ஓர் மாயையோ?—கன்னம்
சிவந்து சிவந்து மலர்ந்ததும் ஓர் மாயமோ?—நெஞ்சில்
தளிர்த்துத் தளிர்த்து வளர்ந்த காதல் மாயுமோ?—நித்தம்
தவித்துத் தவித்துப் புலம்பும் இதயம் ஓயுமோ?—இதை

நினைத்து நினைத்து எனது உள்ளம் உருகுது—நெஞ்சை
நனைத்து நனைத்துத் துயர வெள்ளம் பெருகுது—உன்னை....

## நிலவடிக்குது வெளியிலே! 32

நில வடிக்குது வெளியி லே! — அதன்
நிழ லடிக்குதுன் விழியி லே!
சிலை வடித்தவடி வழகி லே கலை
சிற கடிக்குதுன் ஒளியி லே! 1

பூவி ருக்குது பொழிலி லே! — அதன்
பொலி விருக்குதுன் எழிலி லே!
காவி யத்தொடும் ஓவி யம்பொருள்
கண்டு நிற்பதுன் நிழலி லே! 2

தேனி ருக்குது பூவி லே! — சுவை
தேங்கி நிற்பதுன் நாவி லே!
மானி ருக்குமிரு மீனிருக் கும் கரு
மையி ருக்கும்விழித் தீவி லே! 3

அன்பி ருக்குதுன் அகத்தி லே! — அதன்
அருளி ருக்குதுன் முகத்தி லே!
துன்பு றும்மனம் இன்பு றத்தினம்
துடி துடிப்பதுன் சுகத்தி லே! 4



# நானுண்டு; நீயில்லை!



வானுண்டு; வானகத்தே வைரமணி யெனத்திகழும்
மீனுண்டு; மீனூடே வெண்ணிலவு பெய்யுமொளித்
தேனுண்டு; தென்றலெனும் தீயுண்டு; இவற்றிடையே
நானுண்டு! என்றாலும் நீயில்லை! நீயில்லை! 1

பூவுண்டு! புனலுண்டு; புனலருகே பூத்தமலர்க்
காவுண்டு; இசைபாடும் கருவண்டும் உண்டுண்டு;
பாவுண்டு; நின்னோடு பாடிக் களிப்பதற்கென்
நாவுண்டு! என்றாலும் நீயில்லை! நீயில்லை! 2

மண்ணுண்டு; மரமுண்டு; மாமரத்துப் பூங்குயிலின்
பண்ணுண்டு; தனிமையிலே பாவிமனம் படுந்துயரப்
புண்ணுண்டு; நினையெண்ணிப் பொழுதெல்லாம் தூங்காத
கண்ணுண்டு! என்றாலும் நீயில்லை! நீயில்லை! 3

கடலுண்டு; அலைபரவும் கரையுண்டு; வெண்மணலின்
திடலுண்டு; ஏகாந்தத் திரையுண்டு; பூந்தாழை
மடலுண்டு; மயலூட்டும் மணமுண்டு; மாலான
உடலுண்டு! என்றாலும் உயிரேநீ இங்கில்லை! 4

# இனியும் இதுவே நிலேயானல்... 34

இரவைக் காணேன்! என்ருலும்
ஏனே ஒளியை நான்காணேன்?
இருளேக் காணேன்! என்ருலும்
ஏனே வழியை நான் காணேன்? 1

அலேயைக் காணேன் என்ருலும்
அலேப்புற் றேனே ஆழ்கின்றேன்?
அளலேக் காணேன்! என்ருலும்
ஐயோ! நானேன் வேகின்றேன்? 2

புயலேக் காணேன்! என்ருலும்
ஏனே பொடிந்து வீழ்கின்றேன்?
புகையும் காணேன்! என்ருலும்
ஏனே திணறிப் போகின்றேன்? 3

கடலேக் காணேன்! என்ருலும்
கரையை ஏனே நான்காணேன்?
கணேயைக் காணேன்! என்ருலும்
அகத்தே காயம் ஏன்பட்டேன்? 4

தனிமை என்ப திதுதானே?
தவிப்பின் பொருளும் அதுதானே?
இனியும் இதுவே நிலேயானல்
எவ்வா றுய்யப் பெறுவேனே? 5

# பூவே பூ! 35

பூவே பூ! பொன்னிறப் பூ!
பூவையின் முகத்தில் எத்தனை பூ!

கண்கள் இரண்டும் குவளைப் பூ! —அவள்
கன்ன மிரண்டும் ரோஜாப் பூ!—
பண்கள் மிழற்றும் செவ்விதழ்கள்—அவை
பரவச மூட்டும் மாதுளம் பூ!

நண்ணும் முகமோ தாமரைப்பூ!—அவள்
நாசி யழகோ எள்ளின் பூ!
கண்ணைக் கவரும் வெண்ணிறப் பற்கள்
கட்டுக் குலையா முல்லைப் பூ!

மலரினைத் தேடி வண்டோடும்!—நறும்
மதுவினை நாடி உண்டாடும்!—அந்த
நிலையினில் என்மனம் திண்டாடும்!—அவள்
நேசத்திலே களி கொண்டாடும்!



பாதை வழிச் சூனி யத்தைப்
பார்த்தி ருக்கும்—அந்தப்
பார்வை யிலே ஆர்வ மெலாம்
சேர்த்தி ருக்கும்—நெடுங்
காத வழித் தொலைவி னிலே
காத்தி ருக்கும்—எனைக்
காண்ப தற்காய் நோன்பி ருந்து
பூத்தி ருக்கும்....உன்றன்

கண்ணுக் குள்ளே எத்தனை எத்தனை
கனவு களோ?—அந்தக்
கனவுக் குள்ளே எத்தனை எத்தனை
நினைவு களோ?—உன்றன்
நினைவுக் குள்ளே தழைப்ப தெத்தனை
உறவு களோ?—அதை
நினைத்து நினைத்துத் தவிப்ப தெத்தனை
இரவு களோ?....நந்தம்

கனவும் நினைவும் பலிக்கு மொரு
காலம் வரும்—அந்தக்
காலம் இரவும் உறவும் சேரும்
நேரம் வரும்—அன்று
நினைத்து நினைத்துப் பட்ட துன்பு
மாய்ந்து விடும்—காதல்
நெஞ்சி ரண்டும் கலந்து இன்பில்
தோய்ந்து விடும்!....

இன்றைக்கும் உன்றனுக்கென்
இதயத்தில் இடமுண்டு!
என்றாலும்,
என்றாலும்,
அன்றைக்கோ?
அன்றைக்கென் புவிவாழ்வின்
அர்த்தமெலாம் நீயானாய்!
என்றென்றும் நீயே என்
இலட்சியத்தின் ஊற்றானாய்!
ஒன்றைவிட்டு மற்றொன்று
ஒருகணமும் பிரியாத
அன்றிலைப்போல் நீயே என்
ஆருயிர்க்குத் துணையானாய்!
உன்றன் கருவிழியின்
ஒளியன்றிப் பிறிதெல்லாம்
என்றனுக்கிவ் வுலகத்தே
இருளாக்கித் தோற்றுவித்தாய்!
கன்றிச் சிவந்திடுமுன்
கன்னத்திற் கன்னம்வைத்து
ஒன்றி முயங்குகின்ற
ஒரு பசியைத் தவிர்த்துலகில்
என்றனுக்கு வேறுபசி
இல்லாது ஆற்றுவித்தாய்!

இன்றைக்கோ,
இன்றைக்கோ,
என்றன் இதயத்தில்
எத்தனையோ பசிகளடி!
அன்றைக்கென் புவிவாழ்வில்
அறியாத அர்த்தமெலாம்
இன்றைக்கென் இதயத்துள்
இனங்காட்டித் தோன்றுதடி!
உன்றன் கருவிழியின்
ஒளியன்றிப் பேருலகில்
இன்றென் கண்களுக்கு
இலங்குதடி பல ஜோதி!
உன்றன் உறவொன்றே
உலகிலென்றன் லட்சியமாய்
நின்று நிலவியதோர்
நிலைமாறி, இவ்வுலகில்
இன்றெனக்கு எத்தனையோ
இலட்சியங்கள் தோன்றுதடி!
உன்றனையும் என்றனையும்
உள்ளிட்ட இவ்வுலகில்
தொன்றுதொட்டுத் தொடர்ந்துவரும்
தொல்லைப் பழவினைபோல்,
தென்றலையும் தீயாக்கி,
தேனினையும் விஷமாக்கி,
மன்றல் மலரணையை
மயானச் சிதையாக்கி,
வென்றிநெடும் பாதையிலே
வேலமுள்ளாய் வந்துறுத்திக்
கன்றுவிடும் ஆசைகளைக்
கருக்கிப் பொடியாக்கி
நின்று நிலவிவரும்
நிட்டூரம் அத்தனையும்

கொன்றொழிக்கும் வேட்கையெனைக்
குடிகொண்டு ஆட்டுதடி!
உன்றன் ஒருத்திக்கே
உரிமையென ஆக்கிவைத்த
என்றன் இதயத்துள்
இன்றிவ் வுலகமெலாம்
சென்றுகுடி யேறியெனைச்
சேவகனாய்க் கோருதடி!
என்றாலும்,

என்றாலும்....
இன்றைக்கும் உன்றனுக்கென்
இதயத்தில் இடமுண்டு.
என்றாலும்,

என்றாலும்,
அன்றைக்கென் இதயத்தில்
அளித்திட்ட அவ்விடத்தை
இன்றைக்கும் நீகோர
இடமில்லை, இல்லையடி!



# திரும்பவும் திரும்பவும் பிறப்பேன்! 38

திரும்பவும் திரும்பவும் பிறப்பேன்—இங்கு
தீமைகள் யாவையும் வேரற அறுப்பேன்.
பெரும்புவி யிதனில் வறுமையும் துயரும்
பிணிகளும் போரும் இருந்திடும் வரையில்.... 1

(திரும்பவும்....

வாளினை யோங்கிநான் வருவேன்—இங்கு
வஞ்சகர் தம்மொடு வெஞ்சமர் புரிவேன்.
சூளுரைத் தேன்; இதை மறவேன்—எந்தச்
சோதனை வந்திடும் போதினும் தவறேன். 2

சாந்தியின் செய்தியும் உரைப்பேன்—அதைத்
தடுப்பவர் தமக்கோ எமனாய் இருப்பேன்.
மாந்தர்கள் தமக்குள் வன்பகை மூட்டி
வாழ நினைப்பவர் சூழ்ச்சியை முறிப்பேன். 3

கண்களைத் திறந்துநான் வருவேன்—அந்தக்
காட்சியில் வையக மாந்தரை வருத்தும்
புண்கள் எவையெவை எவையெனப் பார்ப்பேன்;
போக்கிடும் மார்க்கமும் கண்டவை தீர்ப்பேன். 4

செந்தழல் ஏந்திநான் வருவேன்—வாழ்வில்
செத்துளம் மாய்ந்து கிடந்திடும் மாந்தர்
சிந்தையைக் கொதித்தெழச் செய்வேன்—அந்தத்
தீயினில் புன்மைகள் மாய்ந்திடச் செய்வேன். 5

சொற்களைக் கொண்டுநான் வருவேன்—அதைச்
சூறைவெம் புயலாய் மாறிடப் புரிவேன்;
கற்களும்கூட உயிர்த்தெழுந் தாடக்
கவிதைகள் ஆக்கித் தருவேன்; தருவேன். 6

அறிவொளி கொண்டுநான் வருவேன்—காணும்
அண்ட சராசரம் அனைத்தையும் மாந்தர்
இருகரம் அதனுள் வசப்படத் தருவேன்;
ஈசர்க்கு நிகராய் மனிதனைப் புரிவேன். 7

பிறவிகள் எடுத்திடச் சளையேன்—இதைப்
பிணியெனக் கருதிநான் கடவுளை அழையேன்.
கருவினில் வளரும் சிசுக்குலம் யாவின்
கருத்திலும் புகுந்து கனலாய்ப் பிறப்பேன். 8

(திரும்பவு



# பிழை திருத்தம்

பக். 39 வரி 25 : கான்பது-திருத்தம் : காண்பது

பக். 41 வரி 10 : இளைஞனெ-திருத்தம் : இளைஞனென

பக். 44 வரி 19 : களிப்பதற்தாய்-திருத்தம் : களிப்பதற்காய்

பக். 49 வரி 7 : அவன்நபிக்கை-திருத்தம் : அவநம்பிக்கை

பக். 54 இப்பக்கத்தின் கடைசிவரியான 'பாசத்தை விட்டுவிடு!' என்ற வரியை இப்பக்கத்தின் முதல்வரியாக மாற்றிக் கொள்க.

பக். 59 பாடல்வரி 14 : தீந்தமிழோனுடன் பிறந்த
திருத்தம் : தீந்தமிழோடுடன் பிறந்து

பக். 88 வரி 19 : தலைநிமிர்றது-திருத்தம் : தலைநிமிர்ந்து

பக். 92 வரி 11 : வலாளன்-திருத்தம் : வல்லாளன்

பக். 94 வரி 25 : அணுவளப்-திருத்தம் : அணுவைப்

,, ,, 27 : அணுளைவும்-திருத்தம் : அணுவளவும்

பக். 133 வரி 8 : பெருது-திருத்தம் : பெருகுது

பக். 134 வரி 3 : வடிவழகிலே-திருத்தம் : வடிவழகியே

